# பண்டைய நாகரீகத்தின் மறுமலர்ச்சி

'காக்ரா' மற்றும் 'துப்பட்டா'களின் பரம்பரை நாகரீக கவர்ச்சிக்கு புதிய எழிலூட்டுகின்றன மபத்லாலின் 'மெஃப்ரின்' உடுப்புத் துணிகள். பாலியெஸ்டர் மற்றும் காட்டன் இழைகலந்த 'மெஃப்ரின்' பண்டைய கற்பனைகளுக்கு, நவநாகரீக ஒளியோடு கூடிய வண்ணம், வடிவம் மற்றும் நெசவின் நேர்த்தியை இழைத்து, கிளர்ச்சியூட்டும் மறுமலர்ச்சியை அளிக்கிறது!

**மபத்லால் க்ரூப்** அளிக்கும்
நேர்த்தியான துணிமணிகள்



**மெஃப்ரின்**
பாலியெஸ்டர் சேலைகள் மற்றும்
உடுப்புத் துணிகள்

AIYARS-M. 338 TM

# கல்கி



மேலட்டை :

**கோலமிகு தலையணி தரிக்காத
தேனோ ?
கோதையிவள் எழிலுக்குத்
திரையாகுமென்றோ ?**

வண்ணப்படம் : ரவீந்திர பல்லா

## பொருளடக்கம்

பிரமாதீச, ஆடி 7 ★ ஜூலை 22, 1973



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

பெரிய மரங்களிலே மோதிக்காமல் ஒதுங்காப் போயிடலாம்!
சவான்
ஜகஜீவன் ராம்
சுவரன்சிங்
பக்ருதீன் அலி அகமது
மந்திரி சபை மாற்றப் பாதை
காஷ்மீர் விடுமுறை



இந்திரா
கப்பல் மூழ்குதா? முதலில் மாலுமிகள் சண்டையைத் தீர்த்து வைச்சுட்டு வர்றேன்!
இந்திரா காங்கிரஸ் உட்பூசல்கள்
இந்தியப் பொருளாதாரம்

கல்கி

மலர் 32
இதழ் 51



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
-- பாரதியார்

# அரசாங்க வர்த்தகம்

க. சந்தானம்

தனியாரின் வர்த்தகத்துக்குத் தேசியப் பொருளாதாரத்தில் இரண்டாம் பட்சமான இடமே உள்ளது என்றும், அது உற்பத்தியாளர் — பொருளை வாங்குவோர் ஆகிய இருதரத்தாரையும் சுரண்டும் சமூக விரோதியாகவே பெரும்பாலும் உள்ளது என்றும் ஓர் அபிப்பிராயம் பரப்பப்பட்டிருக்கிறது. பண்டத்தைக் கள்ளத்தனமாகப் பதுக்கி வைத்துக் கொண்டு, கொள்ளை லாபம் அடிப்பதே தனியார் வியாபாரத்தின் போக்கு என்ற எண்ணம் ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. சமூக சம நீதியை உத்தேசித்துத் தனியார் வர்த்தகத்தை ஒழித்துக் கட்டிவிட்டு அதனிடத்தில் அரசாங்க வர்த்தகத்தை அமர்த்த வேண்டும் என்று பக்குவமற்ற அரசியல்வாதிகளும், அவசரக்கார ஆதரிச வாதிகளும் விரைகிறார்கள்.

ஒரு பண்டத்தின் உற்பத்தி, அதனை உபயோகித்தல், அதன் விலை இவற்றை ஒழுங்கு செய்வதில் போட்டா போட்டியுள்ள தனியார் வியாபாரத்துக்கு சகஜமான நிலையில் இன்றியமையாத பங்கு உண்டு. உற்பத்தியாளரிடமிருந்து வர்த்தகர்கள் பண்டங்களை வாங்கி மக்களுக்கு விற்கிறார்கள். இந்த அமைப்பில் உற்பத்தியாளர் போட்டா போட்டியிடும் பல வியாபாரிகளிடம் தன் உற்பத்திப் பொருளை விற்பதால் அவருக்கு அதிகபட்ச விலை கிடைக்கிறது. அதே போல் போட்டா போட்டியிடும் பல வியாபாரிகளிடமிருந்து மக்கள் பண்டங்களை வாங்குவதால் அவர்களுக்குக் குறைந்தபட்ச விலைக்குப் பொருள் கிடைக்கிறது. போட்டா போட்டி இருப்பதால் வியாபாரிகள் ஒரு பண்டத்தை உற்பத்தியாளரிடமிருந்து வாங்குகிற விலைக்கும், அதை அவர்கள் மக்களுக்கு விற்கிற விலைக்கும் இடையே உள்ள வித்தியாசம் மிகவும் குறைந்த பட்சமாகிறது. ஆனால் இந்த இயற்கையான கிரமமே, உற்பத்திக்கும் தேவைக்குமிடையே உள்ள வித்தியாசம் அதிகமாகும்போது தாறுமாறாகி விடுகிறது. இச்சமயத்தில்தான் சமூக விரோதப் போக்குகள் தலைதூக்குகின்றன. இவ்வினங்களில் தனியார் வர்த்தகத்தை ஒழுங்குபடுத்துவதும், கட்டுப்பாடு விதிப்பதும், அவசியமானால் அதை அறவே நீக்கிவிடுவதும்கூட நியாயம்தான். ஆனால் இதற்காகத் தனியார் வர்த்தகமே கூடாது என்பது சற்றும் சரியல்ல.

இனி, அரசாங்க வர்த்தகத்தைப் பார்ப்போம். தனியார் வர்த்தகத்தில் துஷ்பிரயோகங்கள் வலுக்கும் போது அதைச் சீர்திருத்த அரசாங்கக் கட்டுப்பாடு இருக்கிறது. ஆனால் அரசாங்கம் ஒன்றே ஏகபோக வர்த்தகராக இருக்கும்போது அதில் இயற்கையாக உண்டாகும் பெரும் தீமைகளைக் கட்டுப்படுத்த இடமே இல்லாமற் போகிறது. உதாரணமாக, விலை நிர்ணயத்தைப் பார்ப்போம். அரசாங்கம் ஏகபோக வர்த்தகராக ஓர் உற்பத்தியாளரிடமிருந்து பண்டத்தை வாங்கும் போது, தான் நிர்ணயிக்கிற விலையே நியாயமானது என்று அது எண்ணலாம். இந்த அமைப்பில் உற்பத்தியாளர், பல போட்டா போட்டி வர்த்தகர்களிடை விலை பேசுகிற வாய்ப்பு இல்லாமல், அரசாங்கம் விதிக்கிற விலைக்கே அதனிடம் விற்கவேண்டியிருப்பதால், உற்பத்தியாளருக்குத் திருப்தி ஏற்படுவதே இல்லை. உடனே அவரது ஊக்கமும் குறைந்துவிடுகிறது. மறு முனையில், அரசாங்கம் என்கிற வர்த்தகரிடம் பொருளை வாங்கி உபயோகிக்கும் மக்கள் இருக்கிறார்களே, இவர்களும் இந்த ஏகபோக வியாபாரி வைத்த விலைக்கே பண்டத்தை வாங்க வேண்டியிருப்பதால், 'பொறுப் பற்ற அதிகாரிகள் மனம் போனபடி நிர்ணயித்த அதிக விலைக்கே வாங்குகிறோம்' என்று அதிருப்தி கொள்கிறார்கள். இதை விடப் பெரிய குறை யாதெனில், அரசாங்க ஏகபோக வர்த்தகத்தின் கீழ் தரமான பண்டங்கள் எல்லாம் கள்ளச் சந்தைக்குப் போய்விடுகின்றன; தரக் குறைவான பண்டமே சர்க்கார் வர்த்த

கத்தின் கீழ் கிடைக்கிறது. ரேஷன் கடைகளிலும் நியாய விலைக் கடைகளிலும் இந்த உண்மையைப் பரம நிதரிசனமாகப் பார்த்து வந்திருக்கிறோம். இதெல்லாம் போதாது என்று, உற்பத்தியாளரிடமிருந்து பண்டத்தை வாங்குகிற போதும் சரி, அதை விற்பனைக்கு வழங்குகிற போதும் சரி பலவிதங்களில் லஞ்ச ஊழல் தவிர்க்க முடியாத அங்கம் போல் உட்புகுந்து விடுகிறது.

பண்டங்களை நான்கு இனங்களாகப் பிரிக்கலாம். முதலாவதாக இயந்திரங்கள் போன்ற பண்டங்கள். இவற்றை உற்பத்தி செய்வோரும் குறைவு; வாங்கி உபயோகிப்போரும் குறைவு. இவ்வினத்தில் இடைத்தரகருக்கு அவசியம் இல்லாமலே உற்பத்தியாளரும், வாங்குகிறவரும் வியாபாரத்தை முடிக்கிறார்கள். அடுத்தபடியாகப் பருத்தி போன்ற பொருட்கள். இவற்றை உற்பத்தி செய்வோர் ஏராளமானவர். வாங்குகிற ஆலைகளோ குறைவானவை. நல்ல விளைச்சல் இருக்கும்போது இடைத் தரகர்கள், உற்பத்தி செய்யும் விவசாயிகளுக்கு யுக்தமான விலை தராமல் தாங்களே பெரிய லாபம் அடைய ஏது உண்டு. இச்சமயத்தில் அரசாங்கத் தலையீடு அவசியமே. தரை மட்ட விலை எனப்படும் குறைந்தபட்ச விலையை உற்பத்தியாளருக்குத் தந்தே ஆகவேண்டுமென அரசாங்கம் நிர்ணயிப்பது அவசியமாகிறது. பருத்தி விவசாயிகளைப் பல கூட்டுறவுச் சங்கங்களாக ஒன்று சேர்த்து நேராக ஆலைகளுக்கு விற்குமாறு செய்வதும் விரும்பத்தக்கதே. ஆயினும், தனது தலையீட்டுக்கு அவசியம் உள்ளது என்பதால் அரசாங்கமே அத்தனை பருத்தியையும் நிர்ணய விலைக்கு வாங்கி ஊர் ஊராகக் கிடங்குகளுக்கு அனுப்பி வைத்து, முடிவில் ஆலைகளுக்கு விற்பதென முடிவு செய்தால் பண்டமும் பணமும் பொழுதும் ஏராளமாக விரயமாவதிலேயே முடியும்.

இனி மூன்றாவதாக, நூல் இழை போன்ற சில பண்டங்களை உற்பத்தி செய்கிற ஆலைகள் குறைவு ; ஆனால் அவற்றை வாங்கும் ஆலைகளும், கைத்தறி நெசவாளிகளும் அதிகம். சமீப காலத்தில்தான் இந்த இனத்தில் ஏற்பட்ட சிக்கல்களைப் பார்த்தோம். கூட்டுறவுச் சங்கத்தின் கீழ் சேர்ந்திருந்த கைத்தறியாளர்கள் மட்டுமே இதை ஓரளவு சமாளிக்க முடிந்தது. ஆனால் அனைவருக்கும் நிரந்தரப் பரிகாரம் வேண்டுமாயின், இது போன்ற இனங்களில் மாநில அரசாங்கமே மொத்த உற்பத்தியையும் விலை கொடுத்து வாங்கிப் பிறகு அதை வாங்கி உபயோகிப்போருக்கு விற்பதற்கு மிகுந்த நியாயம் உண்டு. நமது மாநிலப் பொருளாதாரத்தில் கைத்தறித் தொழில் ஒரு ஜீவாதாரப் பங்கு பெற்றுள்ளது. எனவே, ஆலைகளிலிருந்து நூலிழையை வாங்கி, அதனை நெசவாளருக்கு விற்கிற பொறுப்பு முழுவதையும் மாநில சர்க்காரே மேற்கொள்ளலாம்.

கடைசியாக, சில பண்டங்களை உற்பத்தி செய்வோரும் கோடிக் கணக்கில் இருப்பார்கள்; அவற்றை வாங்கி உபயோகிப்போரும் கோடிக்கணக்கில் இருப்பார்கள். உணவு தானியங்கள் இதற்கு மிக முக்கியமான உதாரணமாகும். உற்பத்தி செய்யும் விவசாயிகளும் உழவர்களுமே அவற்றில் ஒரு கணிசமான பங்கை உபயோகிப்பவர்களாகவும் இருக்கிறார்கள். கோடிக்கணக்கான விவசாயிகளிடம் இருக்கும் உபரி தானியத்தை எல்லாம் வாங்கி, நாடு நகரம் கிராமம் பட்டினம் எங்கெங்கும் உள்ள கோடானு கோடி மக்களுக்கு விற்கிற பொறுப்பை எந்த அதிகார வர்க்கத்தாலும் ஏற்கவே முடியாது. அரசாங்கம் செய்யக்கூடியதெல்லாம் இதுவே: அதாவது, விற்பனைக்கு வருகிற தானியத்தில் ஒரு பகுதியை அரசாங்கம் வாங்கிச் சேமிப்பாக வைத்துக் கொள்ள வேண்டும்; இவற்றை மக்களின் கூட்டுறவுச் சங்கங்களுக்கும், நியாய விலைக் கடைகளுக்கும் வழங்கி, நகரங்களில் உள்ள ஏழை மக்களுக்கு விநியோகிக்க வேண்டும். இந்த அளவோடு நிற்காமல் தானிய விளைச்சல் முழுவதையும் கொள்முதல் செய்வதோ, பூரண ரேஷன் முறையை ஏற்படுத்துவதோ நடைமுறைக்கு உதவவே உதவாது. உணவு தானிய வர்த்தகத்தைச் சர்க்கார் வசம் கொண்டு வந்து அமலாக்குவதற்காக முன்பு செய்த முயற்சிகள் படுதோல்வி அடைந்தன; அதோடு மட்டுமின்றி, இதன் விளைவாக மக்களுக்கு ஏற்பட்ட அதிருப்தியினாலேயே தேர்தல்களில் காங்கிரஸாரும் படுதோல்வி அடைந்தனர். ஆயினும் நம் நாட்டு அரசியல்வாதிகள் பழைய படிப்பினைகளிலிருந்து புத்திபெறுவதாகத் தெரியவில்லை. இப்போது மீண்டும் கோதுமையில் சர்க்கார் வர்த்தகத்தைப் பரீட்சித்துப் பார்த்துத் தோல்வி கண்டு வருகிறார்கள். சமீபத்துத் தோல்வி இவர்களது சாதுரியக் குறைவையே காட்டுகிறது. வறட்சி நிலைமை வெளியாகத் தொடங்கிய போதே அயல்நாட்டிலிருந்து ஐம்பது லட்சம் டன் கோதுமை இறக்குமதி செய்வதாகத் தாங்கள் உத்தேசித்திருந்ததை அரசாங்கம் வெளியிட்டிருந்தால், பல விவசாயிகள் தானியத்தைப் பதுக்காமல் அரசாங்கத்திடம் விற்க முற்பட்டிருப்பார்கள். மாறாக, இறக்குமதியே செய்யப் போவதில்லை என்று பிரமாதமாகப் பிரகடனம் செய்துவிட்டு, மொத்த வியாபாரிகள் கோதுமை வாங்குவதையும் தடை செய்ததாலேயே, இப்போது சென்ற ஆண்டைவிடக் குறைவாகக் கொள்முதல் செய்ய முடிந்திருக்கிறது! இந்த இலட்சணத்தில் இப்போதும் கூட, 'கோதுமையோடு நிற்கமாட்டோம், அரிசியையும் ஏகபோகமாகக் கொள்முதல் செய்வோம்' என்று மத்திய சர்க்காரின் பிரதிநிதிகள் பேசிக் கொண்டிருக்கும் பரிதாபத்தை என்னென்பது! அரிசி அரசாங்க வர்த்தகத்தின் கீழ் வந்தால் விளைவு அப்பட்டமான விபரீதமேயாகும். கோதுமைக்கும் அரிசிக்கும் அரசாங்கக் கொள்முதலை விதித்து விட்டு, கம்பு சோளம் போன்ற புஞ்சைப் பயிர்களை மட்டும் சுதந்திரச் சந்தையில் விட்டால், இந்தப் புஞ்சை தானியங்களின் விலையும் அதிகமாகிவிடும். அரிசிக்கும் கோதுமைக்கும் விஸ்தாரமான கள்ளச் சந்தைகள் உருவெடுத்து நிலைபெறும். தரமான பண்டம் இந்தக் கள்ளச் சந்தைக்கே செல்லும். ஆனால் விலையோ எக்கச்சக்கமாக உயர்ந்










"இரட்டை வேடத் திலகம்"

இருக்கும். இதன் விளைவாக மக்களிடை ஏற்படக்கூடிய அதிருப்தியை அளவிட முடியாது; பல இடங்களில் சட்டமும் ஒழுங்குக் கட்டுப்பாடும் தகர்ந்து போகிற நிலைகூட ஏற்படலாம். எனவே, அரிசியை முக்கிய உணவாகக் கொண்டுள்ள தமிழ்நாடு முதலிய மாநில சர்க்கார்கள் அரிசி விலையை ஒழுங்கு படுத்துவதோடும், ஏழைகளின் விநியோகத்துக்கென சுதந்திரச் சந்தையிலிருந்து ஒரு பங்கை மட்டும் தானே வாங்கி நியாய விலைக் கடைகள், கூட்டுறவுச் சங்கங்கள் ஆகியவை மூலம் விற்பதோடும் நிற்க வேண்டும். விவசாயிகளிடமிருந்து இன்ன விலைக்குக் குறைவாக அரிசி வாங்கக்கூடாது என்று குறைந்த பட்ச விலை நிர்ணயிக்க வேண்டும். சில்லறை வியாபாரிகள் குறிப்பிட்ட விலைக்கு அதிகமாக அரிசி விற்கக் கூடாது என்று அதிக பட்ச விலையும் நிர்ணயிக்க வேண்டும். அனைவரும் அறியும்படி இவ்விலைகளைப் பிரகடனப் படுத்துவது அவசியம். குறைந்த பட்சத்துக்குக் குறைவாக விவசாயிக்குக் கொடுப்பதும், அதிகபட்சத்துக்கு அதிகமாக வியாபாரி விற்பதும் சட்டப்படி குற்றமாக்கப்படலாம். இந்த நடவடிக்கைகளை மேற்கொண்டால் இன்றைய உணவுச் சிக்கலை வெற்றிகரமாகச் சமாளிக்க இயலும். வருகிற வருடத்தில் நல்ல விளைச்சல் இருக்குமாயின், மேற்சொன்ன நடவடிக்கைகளையும் முடிந்த மட்டும் தளர்த்தி விடலாம். நம் தேசத்தில் அரசாங்கமே உணவு தானிய வர்த்தகத்தில் ஏகபோக வியாபாரத்தை மேற்கொள்வது முற்றிலும் பைத்தியக்காரத்தனமே ஆகும்.

# தமிழ் நாட்டிலே...

தீரன்

## அந்த முதல்வரே இந்தப் பேச்சையும் பேசுகிறார்

திண்டுக்கல் தேர்தலில் இரு பிரிவுக் கம்யூனிஸ்டுகளும் தம்முடைய எதிரியின் பக்கம் என்று முடிவானதும், ''கம்யூனிஸ்டுகளை அழிப்பதே என் முதல் வேலை. அவர்கள் என் விரோதிகள்'' என்பதுபோலெல்லாம் கருத்துப்படப் பேசிய தி.மு.க. முதல்வர் திரு கருணாநிதி இப்போது ஜூலை முதல் வாரம் தமிழக வலது கம்யூனிஸ்டுக் கட்சி மேலும் இரண்டு பிரிவாக உடைந்தவுடன், மணலி கோஷ்டியினருக்கு வலைவீசி அழைப்பு விடுக்கிறார்.

''தி.மு.க.வின் கொள்கைகளை ஏற்றுக் கொண்டு இதில் சேருவதற்கு விரும்பினால் அவர்கள் கம்யூனிஸ்டுக் கட்சியிலிருந்து வந்தவர்கள் என்றாலும் அவர்களைக் கழகத்தில் சேர்த்துக் கொள்ளத் தயார். தற்போது இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சியிலிருந்து வந்திருப்பவர்கள் தி.மு.க.வில் சேர வேண்டும் என்ற எண்ணம் எதையும் இதுவரை வெளியிடவில்லை என்றாலும் அவர்கள் தி.மு.க.வில் சேர விரும்பினால் அது குறித்துப் பரிசீலனை செய்யப்படும்'' என்று திரு கருணாநிதி கூறியிருப்பது இன்று யார் வந்தாலும் சேர்த்துக் கொள்கிற நிலைக்குத் தி.மு.க. இருப்பதையே காட்டுகிறது.

## பொதுத்துறையில் லாபம்

பொதுத் துறை நிறுவனங்கள் பெரும்பாலும் நஷ்டத்தில் நடப்பதே நடைமுறையாக இருப்பினும் இப்போது அவற்றில் லாபம் வந்தால்தான் காலம் தள்ள முடியும் என்கிற அளவு பொருளாதார நெருக்கடி நாட்டில் தோன்றிவிட்டது. அந்த ஆசையை மத்திய கனரகத் துறை மந்திரியே திருச்சிக்கு அருகில் உள்ள திருவெறும்பூர் பாரத் ஹெவி எலெக்ட்ரிகல் தொழிற்சாலையில் ஜூலை முதல் வாரம் அந்தத் தொழிற்கூடத்தின் பத்தாவது ஆண்டுவிழாக் கூட்டத்தில் தெரிவித்திருக்கிறார்.

''நம்மிடம் உள்ள பதினேழு அரசுத்துறை நிறுவனங்களில் திருச்சி, போபால் நகரங்களில் உள்ள ஹெவி எலெக்ட்ரிகல்ஸ் ஆலைகளும், பெங்களூர் எச். எம். டி., துங்கபத்ரா ஸ்டீல்ஸ் ஆகியவையுமாக உள்ள நாலே நிறுவனங்கள்தாம் லாபத்தில் நடக்கின்றன. இதுவரை லாபமே காட்டாமல் இருக்கும் பொதுத்துறை நிறுவனங்கள் இனி மேல் குறைந்தபட்சம் பத்து சதவிகித லாபமாவது காட்ட வேண்டும் என்பது அரசின் நோக்கம். பொதுத்துறை நிறுவனங்கள் நாட்டிலுள்ள வறுமையை ஒழிக்கும் வகையில் பொருளாதார வளர்ச்சிக்கு உதவ வேண்டும்'' என்று திரு டி. ஏ. பை ஆசைப்படுகிறார். போகட்டும், இப்படி ஒரு நல்ல ஆசையாவது பட முடிந்திருக்கிற வகையில் அவரைப் பாராட்டலாம்.

## கேலிக் கூத்து

கடந்த சில மாதங்களாகக் கிருஷ்ணராயபுரம் எம்.எல்.ஏ. சவுந்தர பாண்டியன் என்பவர் பற்றி 'இன்று மீண்டும் தி.மு.க.வில் சேர்ந்தார்' என ஒரு நாளும் 'இன்று மீண்டும் அ.தி.மு.க.வுக்கே போய்விட்டார்' என மறு நாளும் பத்திரிகைகளில் மாற்றி மாற்றிச் செய்தி வரும். அதனால் அவர் என்று எந்த விநாடியில் எந்தக் கட்சியில் இருக்கிறார் என்பதே பத்திரிகைகளுக்கும் பொதுமக்களுக்கும் தெரியாமல் திணற வேண்டியிருக்கும். அவ்வளவு வேகமானவை அவரது மாற்றங்கள்.

இப்போது அதே வழியில் கன்யாகுமரித் தொகுதி எம்.எல்.ஏ. திரு ராஜாப்பிள்ளையும் போயிருக்கிறார். அவர் தி.மு.க.விலிருந்து அ.தி.மு.க.வுக்கு மாறியதாகப் பத்திரிகையில் செய்தி வந்த இரண்டு நாட்களில் மறுபடி

தி.மு.க.வுக்கே திரும்பிவிட்டார் அவர். ''மனக் குழப்பத்தாலும், பிறர் வற்புறுத்தலாலும் தெரியாத்தனமாய் அ.தி.மு.க.வில் சேர்ந்ததற்காக வருந்துகிறேன்'' என்று கூறி விட்டுக் கருணாநிதி முன்பாக மறுபடி தி.மு.க.வில் சேர்ந்துள்ள ராஜாப்பிள்ளை மறுபடி எந்த நிமிஷமும் இதே போல் ஒரு காரணத்தைக் கூறி அ.தி.மு.க.வுக்கும் மாறலாம். இவர் அ.தி.மு.க.வுக்கு மாறுகிற தினத்தன்று கிருஷ்ணராயபுரம் எம்.எல்.ஏ. தி.மு.க.வுக்கு மாறலாம். கிருஷ்ணராயபுரம் எம்.எல்.ஏ. அ.தி.மு.க.வுக்கு மாறுகிறபோது ராஜாப்பிள்ளை தி.மு.கவுக்கே மறுபடி வந்து விடலாம். இவர்கள் இரண்டு பேரும் நன்றாகச் சடுகுடு விளையாடுவார்கள் போலும்.

## கவர்னரே வேண்டாமாம்!

அனுமந்தையா தலைமையிலான நிர்வாகச் சீர்திருத்தக் கமிஷன் அறிக்கையின் மீது கருத்துத் தெரிவித்திருக்கும் தமிழ் நாடு அரசு சில விநோதமான யோசனைகளைத் தெரிவித்திருக்கிறது. மாநில சுயாட்சியைப் பிரசாரம் செய்யத் தமிழக முதல்வர் உ.பி. போகத் துணிந்துவிட்ட சமயத்தில் இச்செய்தியும் பத்திரிகைகளில் வந்துள்ளது.

இதில் ஒன்று கவர்னர் பதவி தேவையில்லை என்பது. மற்றொன்று ஹைகோர்ட் நீதிபதி ஒருவரைப் பதவியிலிருந்து நீக்க மாநில சட்டசபைக்கு அதிகாரம் தரப்பட வேண்டும் என்பது. ''ஒரு வேளை கவர்னர் பதவியை நீடிக்க விரும்பினாலும் கவர்னரை நியமிப்பதே முதலமைச்சரைக் கலந்த பின்புதான் நடக்க வேண்டும். கவர்னர் இஷ்டப்படி மந்திரி சபையைக் கலைக்க அவருக்கு அதிகாரம் இருக்கக் கூடாது. நீதிபதியை நீக்குவதற்குச் சட்டசபைக்கு அதிகாரம் இருக்க வேண்டும்'' என்றெல்லாம் தமிழ் நாடு அரசாங்கம் கூறியுள்ள யோசனைகளைப் பார்த்தால் மலைப்பாயிருக்கிறது. நீதிபதியை நியமிக்கச் சிபாரிசு செய்யும் உரிமை இருக்கும் போது அதில் திருப்திப்படாமல் நீக்கும் அதிகாரம் கேட்டு யோசனை கூறும் தமிழக அரசின் ஆசையில் அர்த்தமில்லாவிட்டாலும் அது புதுமையானதுதான்.

அப்படிப் புதுமையாக இல்லாத யோசனையைத் தமிழ்நாடு அரசு எங்காவது சொல்லுமா? தமிழ்நாடு அரசா, கொக்கா? ஆனால் ஒருவர் தன்னுடைய பேர் ரிப்பேராகிவரும் நேரத்தில் இப்படி யோசனைகளைச் சொன்னால் சந்தேகப்படமாட்டார்களா என்றாவது அரசு யோசிக்க வேண்டாமா?

## மின்சாரவெட்டு முழுமையாக நீங்குமா?

மின்சார வெட்டை ஓரளவு தளர்த்தியிருக்கும் தமிழ் நாடு அரசு அவற்றை வீடுகளுக்கும் சிறு தொழிற்சாலைகளுக்கும் தளர்த்தாமல் விட்டிருப்பது ஏனென்று தெரியவில்லை. உணவுப் பொருள்களை அரைக்கும் மாவு மில் போன்றவற்றில் ஏறிய அரவைக்கூலி மின் வெட்டை நீக்கியபின்னும் சிறிதும் குறையவில்லை. 'வீடுகளில் மின்சாரத்தைப் பயன்

## ராஜாஜி சிந்தனை

வீடு கட்டும்போது சாரம் கட்டி அதன் மேல் நின்று வேலைக்காரர்கள் கட்டட வேலை செய்வார்கள். வீடு கட்டி முடிந்ததும் சாரத்துக்கு வேலை இல்லை. நல்ல ஞானம் அடைந்தவர்களுக்குக் கோயிலும் குளமும் வேண்டியதில்லை. தியானத்தில் மனதை அலையாமல் நிறுத்தப் பயிலாதவர்களுக்குப் பூஜையும், ஸ்நானமும் அவசியமாகும்.

★

**தாய் தகப்பன் இல்லாவிட்டால் ஒரு குழந்தை சீரும் செல்வமுமாக வளரமுடியாது. தகப்பன் போல், ஒரு சர்க்காரும், தாய்போன்ற உணர்ச்சி கொண்ட சமூக சேவையாளர்களும் இல்லாவிட்டால் ராஜ்யம் என்ற சிறு குழந்தை செவ்வனே பராமரிக்கப்பட முடியாது.**

★

இல்லறம் நடத்துங்கள். ஆனால் ஒரு கையால் வாழ்க்கைக் கடமைகளைச் செய்து கொண்டு ஒரு கை பகவான் காலைப் பிடித்துக்கொண்டே இருக்க வேண்டும். வேலை செய்யாமலிருக்கும்போது இரண்டு கைகளும் ஆண்டவன் பாதங்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்கப் பயன்பட வேண்டும்.

★

**உள்ளத்தைக் கவாதினத்தில் வைத்துக் கொண்டு அதில் அழுக்குச் சேராமல் வைத்துக் கொண்டால் எதையும் செய்ய முடியும்.**

★

மனிதனுடைய உள்ளம் ஒரு விசித்திரம். அது வளர்வதும், மாறுவதும் ஆண்டவனின் விளையாட்டு. அடுப்புக் கரியும் பளபளவென்று மின்னும் வைரக் கல்லும் ஒரே பொருள் என்று ரசாயனப் பண்டிதர்கள் சொல்லுகிறார்கள். ஒரே பொருள், அதன் அணு அமைப்பு கொஞ்சம் மாறிவிட்டால் வேறு பொருளாகிவிடுகிறது. பொருளே மாறும் பொழுது ஒரு மனிதனுடைய குணங்கள் மாறுவதில் என்ன வியப்பு?

படுத்துகிறவர்கள் இத்தகைய யூனிட்டுகளுக்கு மேல் பயன்படுத்தினால் இரண்டு மடங்கு கட்டணம் செலுத்த வேண்டும்' அல்லது அபராதக் கட்டணம் செலுத்த வேண்டும் என்றிருக்கிறது. வீடுகளுக்கு மின்சாரம் உபயோகிப்போர் விஷயத்திலும் அரசு தன் பிடியை இனிமேல் தளர்த்திவிடலாம். பத்திரிகைகள், அச்சகங்கள் பற்றியும் தாராளமாக நடந்து கொள்ளலாம். வெளி-தண்டக் கட்டணம் அபராதக் கட்டணம் போன்றவற்றையும் நீக்கி அறிவிக்காமல் ஏன் தயங்குகிறார்களோ தெரியவில்லை. ஒரு வேளை மழை நிறைய பெய்து இவ்வளவு விரைவாக நிலைமை சரியாகி எல்லாவற்றையும் தளர்த்தும்படி ஆகிவிட்டதே என்று யாருக்காவது வருத்தமா? சாமி வரம் கொடுத்தாலும் பூசாரி வரம் கொடுக்காமல் தவிக்கவிடலாமா?

## அய்யம்பேட்டை வேலை

மற்ற ஊர்களில் நடக்கும் வம்பு தும்பு வேலைகளில் ஒரு வகையை 'அய்யம்பேட்டை வேலை' அல்லது 'அய்யம்பேட்டை விவகாரம்' என்று கேலியாகச் சொல்வது உண்டு. இப்போது அய்யம்பேட்டையிலேயே ஓர் அய்யம்பேட்டை விவகாரம் நடந்திருக்கிறது.

அய்யம்பேட்டையில் உள்ள வரலாற்றுப் பெருமை வாய்ந்த சக்கராப் பள்ளிக் கோவிலைச் சுற்றிலுமுள்ள நிலங்களை ஒரு தி. மு. க. நபரின் தூண்டுதலின் பேரில் 62 முஸ்லிம்களுக்குப் பட்டாப் போட்டுக் கொடுத்திருப்பதாகத் தெரிகிறது. இந்த ஹிந்துக் கோவிலில் திருவிழாக் காலங்களில் முன்பே அடிக்கடி இந்துக்களுக்கும் உள்ளூர் முஸ்லிம்களுக்கும் சிறு சிறு தகராறுகள் வருவது உண்டு. இப்போது கோவிலைச் சுற்றியிருக்கும் இடங்களை முஸ்லிம்களுக்குப் பட்டாப் போட்டுக் கொடுத்திருப்பதன் மூலம் நிரந்தரத் தகராறுக்கு வழி செய்து விட்டதாக வருந்துகிறார்கள் உள்ளூர் மக்கள். மக்களின் எதிர்ப்பையும் பொருட்படுத்தாமல் இந்தப் பட்டாக்கள் தரப்பட்டனவாம். இந்தப் பட்டாக்கள் இப்படித் தரப்பட்டிருப்பதால், சக்கரவாகேசுவர சுவாமி, கோவிலைச் சுற்றி உலா வரவோ, திருவிழா நடத்தவோ முடியாது என்றும், பட்டாப் பெற்ற சிலர் கோவில் மதிலை ஒட்டி வீடுகள் கட்டிக் கொண்டும், கசாப்புக் கடை போன்ற கடைகளை வைத்துக் கொண்டும் இருப்பதாகவும் கூறப்படுகிறது. பட்டாப் பெற்றிருப்பவர்களில் யாரும் விவசாயிகள் இல்லையாம். சிலர் வெளி மாவட்டங்களில் இருந்து வந்தவர்களாம். அவர்களுடைய ஊர்களிலேயே அவர்களுக்கு வீடு வாசல்கள் கூட உண்டாம். அப்படியே இவர்களுக்கு வீடோ மனையோ பட்டாப் போட்டு வழங்க வேண்டுமானாலும் அதற்கு வேறு பகுதிகளில் போதிய இடமிருந்தும் கோவிலை ஒட்டி வேண்டுமென்றே இடம் வழங்கியதன் மூலம் கலகத்துக்கு வழி வகுக்கப்பட்டிருப்பதாக மக்கள் பேசிக் கொள்கிறார்கள். இக்கோவில் சுவாமிமலை தேவஸ்தானத்தில் இருப்பதால் கோவில் நிலத்தைப் பட்டாப் போட்டுத் தரக்கூடாது என்று சுவாமிமலை அறங்காவலர் குழு எதிர்ப்புத் தெரிவித்திருந்தும் இது நடந்திருக்கிறது. பட்டாக்களை வாபஸ் பெற்றுக் கோவில் நிலத்தை மீட்டுத் தரக் கோரி ஜூலை 9ந் தேதி அய்யம்பேட்டையில் கடை யடைப்பு நடந்தது. கலவரத்துக்கும் சர்ச்சைக்கும் இடமில்லாத வேறு பகுதியில் முஸ்லிம்களுக்கோ பிறருக்கோ பட்டாக்கள் தருவதை இவ்வூர் மக்கள் ஆட்சேபிக்கவில்லை. ஊர்வலம், பொதுக் கூட்டம் நடத்த முடியாதபடி அய்யம்பேட்டைப் பகுதியில் ஜூலை 14ந் தேதி வரை தடை போடப்பட்டுள்ளது. மக்களின் மனக் குறையை உணர்ந்து எல்லாத் தரப்பினரின் நியாயங்களையும் அரசு கவனிக்க வேண்டும். அய்யம்பேட்டை வேலை அய்யம்பேட்டையிலேயே செல்லுபடியாகாது.

---

● ஓர் ஓவியப் பிரியர், பிகாஸோ வரைந்ததாகக் கூறப்பட்ட ஓர் ஓவியத்தைக் கொண்டுவந்து அவரிடமே காட்டி, "இதை நீங்கள்தான் வரைந்தீர்களா?" என்று கேட்டார். உடனே பிகாஸோ, "என்ன



விலை கொடுத்து இதை வாங்கினீர்கள்?" என்று கேட்டார்.

"18,500 டாலர் கொடுத்தேன்."

"அவ்வளவு விலை கொடுத்திருந்தால் அது என்னுடையதாகத்தான் இருக்கும்!" என்றார் பிகாஸோ!

சம்பத் குமாரி

ஆதாரம்: "ஸ்டில் மோர் ஜோக்ஸ்"

● எல்லாம் பிளாஸ்டிக் மயமாகிக்கொண்டு வரும் காலம் இது. சைக்கிளும் இப்போது பிளாஸ்டிக்கில் வரப்போகிறதாம். நியூயார்க்கிலுள்ள போல்ஸி நிறுவனம் விரைவில் இந்தப் பிளாஸ்டிக் சைக்கிள்களைத் தயாரித்துத் தரப்போகிறது. இந்தச் சைக்கிள்



16 பவுண்ட் எடையே இருக்குமாம். (சாதாரண சைக்கிள் 25 அல்லது 35 பவுண்ட் எடை இருக்கும்.) இந்தச் சைக்கிளுக்கு கிரீஸோ எண்ணெயோ போட வேண்டிய அவசியமில்லை. இந்தச் சைக்கிள் ஆறு வர்ணங்களில் வெளிவர விருக்கிறது.

நியூஸ் வீக் - பி. எஸ். எம்.

# நீங்கள் செய்வது எதுவானாலும் சரி, பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் அதை சிறந்த முறையில் செய்ய உதவுகிறது.



அரைப்பங்கு சிலவில் இருபங்கு ஒளி!

பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் ஒரு 100 வாட் பல்பினைப்போல் இருபங்கு ஒளி தருகிறது. இருப்பினும் இதற்கு ஒரு 40 வாட் பல்புக்கான அளவு மின்சாரமே தேவைப்படுகிறது. பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் பொருத்தி மின்சாரத்தை மிச்சப்படுத்துங்கள்.

தரம் மற்றும் உழைப்பு இவ்விஷயத்தில் பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட்டே வாங்குவதற்குச் சிறந்ததாகும். கச்சிதமான பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் யூனிட் தரமான உறுப்புகளுடன் முன்கூட்டியே ஒயர் செய்யப்பட்டதாகும். பொருத்துவதற்கு எளிதானது. உபயோகிப்பதற்கு சிக்கனமானது. வேலைகளை சிறந்த முறையில் செய்ய இது உதவுகிறது—உங்கள் கடையிலும் சரி, வீட்டிலும் சரி.

**சிறந்த ஒரு லாம்ப் வேண்டுமா? அதை முதலில் அளிப்பது பிலிப்ஸ்**

**பிலிப்ஸ்**




பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்

# "கணக்காயிருக்கணும்"



ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசார்ய ஸ்வாமிகள்

"கணக்கா யிருக்கணும்" என்ற வார்த்தைகளைத் தமிழ்நாட்டில் பண்டிதர், பாமரர் எல்லோரும் உபயோகிக்கிறார்கள். ஒரு வஸ்துவுக்கு நாம் அதன் விலையை விட ஒரு பைசா அதிகமாகக் கொடுப்போமா? பண விஷயத்தில் எத்தனை கணக்காக இருக்கிறோம்? இப்படியேதான் வார்த்தைகளை உபயோகிக்கும் போது ஒரு வார்த்தைகூட அதிகமாகக் கூடாது. செய்கிற காரியங்களில் ஓர் அநாவசியம்கூட இருக்கக் கூடாது. எண்ணங்களிலும் அவசியமில்லாமல் மனம்பாட்டுக்கு ஓடிக் கொண்டிருக்கக் கூடாது.

பண விஷயம்தான் நமக்கு முக்கியமாக இருப்பதால் அதில் ஆரம்பித்து எல்லாவற்றிலும் கணக்காக இருக்க வேண்டும் என்கிறோம். இந்த நடைமுறை உலகில் மநுஷ்யர்கள் எல்லோரும், 'பணம் வேண்டாம்' என்று இருந்துவிட முடியாது. "பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை" என்று பெரியவர்களே சொல்லியிருக்கிறார்கள். பணத்தைக் கவனத்துடன் செலவழிக்க வேண்டும். தர்ம மார்க்கத்திலேயே செலவிடவேண்டும். செலவுகளுக்குள் தானமாகச் செலவழிப்பதுதான் உண்மையில் நமக்கு "வரவு". நமக்கு இதனால் புண்ணிய வரவு கிடைக்கிறது. தனக்கென்றே செலவு செய்து கொள்வது உண்மையில் தன் ஆத்ம ச்ரேயஸுக்கு உதவுவது இல்லை. மற்ற இனங்களில் 'கணக்காயிருந்தால்' ஏழையானாலும்கூட ஒரு பைசாவாவது தருமம் செய்ய முடியும். பரம ஏழைகளாக இருந்து கொண்டும் சத் காரியங்களுக்குத் தங்களால் முடிந்ததை உதவுகிறவர்கள் இப்போதும் இருக்கிறார்கள். பணக்காரனுக்கு மற்ற பணக்காரனைப் போல் தானும் இருக்க வேண்டும் என்ற எண்ணத்தில் ஆடம்பரத்துக்கும் ஜாதாரித்தனத்துக்குமே ஏகமாகச் செலவு செய்ய வேண்டியிருக்கிறது. இவற்றுக்காக அவனும் கடன் வாங்கிக் கொண்டுதான் இருக்கிறான். ஏழையைவிடப் பணக்காரனுக்குத்தான் அதிகம் கடன் இருக்கிறது. பணக்காரன் தன் போலி அந்தஸ்தைக் காப்பாற்றிக் கொள்வதில் செலவிடுவது தருமத்துக்குச் செலவாக வேண்டும். நம் தேசத்தில் ஜலத்தைக்கூட அதிகமாகக் கொட்டிச் செலவிடக்கூடாது என்பார்கள். ஏதாவது ஒரு விஷயத்தில் சிக்கனம் இல்லாவிட்டால் அந்த மனோபாவம் எல்லாவற்றிலும் வந்து விடும் என்பதால் இப்படிச் சொன்னார்கள். சிக்கனமாயிருப்பது கருமித்தனம் அல்ல. சொந்த விஷயத்தில் படாடோபம் இல்லாமல் "கணக்காயிருப்பது"தான் சிக்கனம். இதுவே தான தருமங்கள் செய்வதற்கு உதவும்.

பேச்சில் கணக்காயிருப்பது ரொம்ப அவசியம். திருக்குறள் முதலிய நீதி நூல்கள் இதைப் பற்றி நிரம்பச் சொல்லியிருக்கின்றன. இப்போதுள்ள ஏராளமான சர்ச்சைகளுக்கும், வாதப் பிரதிவாதங்களுக்கும் காரணம் வார்த்தையில் கட்டுப்பாடு இல்லாததுதான். இதனாலெல்லாம் உருப்படியான விளைவு எதுவுமே இல்லை. நியூஸ் பேப்பர், பிரசங்கங்கள், இவற்றைப்பற்றி ஜனங்களின் விமரிசனங்கள் எல்லாம் பெரும்பாலும் விருதாவாகவே இருக்கின்றன. வாக்குக் கட்டுப்பாடு வேண்டும். பிறர் மனத்தைப் புண்படுத்தாத பேச்சே பேச வேண்டும். தன் ஆத்மாவை உயர்த்திக் கொள்ள உதவுகிற விஷயங்களையே பேச வேண்டும். இதில் நாம் கவனம் செலுத்தினால் இன்று தேசத்தில் இருக்கிற அநேக சண்டைகளும் சிரமங்களும் மறைந்தே போகும். இதைப் பற்றி நான் இப்போது பேசுவதில்கூட 'கணக்கா யிருக்கணும்'. இல்லாவிட்டால் இதிலிருந்தே வியர்த்தமான சர்ச்சை எழும்பக்கூடும்.

இதே மாதிரிதான் நம் காரியங்களும், எண்ணங்களும்கூட ஒரு கட்டுப்பாட்டின் கீழ் வந்து, ஆத்ம க்ஷேமகரமாக இருக்க வேண்டும்.

பணத்தில் சிக்கனமா யிருப்பது மட்டுமின்றி, மனோ வாக்குக் காயங்களில் கட்டுப்பாட்டுடன் நடப்பதே "கணக்காயிருப்பதாகும்." இந்தக் கட்டுப்பாட்டுக்குத்தான் **யோகம்** என்று பெயர்.

கிருஷ்ண பரமாத்மாகூட இப்படித்தான் கீதையில் சொல்லியிருக்கிறார் என்று கருதலாம். 'ஸாங்கியமும் யோகமும் ஒன்றுதான்' என்கிறார் அவர். 'ஸாங்கியம்' என்பது 'ஸங்கியை' என்பதிலிருந்தே வந்தது. 'ஸங்கியை' என்றால் கணக்கிடுவது என்றுதான் அர்த்தம். 'ஜனஸங்கியை' என்று சொல்கிறோமல்லவா? எதிலும் சரியாகக் கணக்கிடுகிற புத்தி வந்துவிட்டால், மனச் சலனமில்லாமல் சம நிலையில் நிற்கப் பழகும். இது முற்றுகிற நிலையே யோகம்.

பரம லௌகிகமாகத் தோன்றும் 'கணக்காயிருக்கணும்' என்ற வார்த்தை பரம வேதாந்தத்தில் கொண்டு சேர்க்கிறது. திருமூலரும் இப்படித்தான் சொல்கிறார். உண்மையான கல்வி ஈசுவர தத்துவத்தை அறிவதுதான். "கணக்கறிந்தார் கல்வி கற்றறிந்தாரே" என்கிறது திருமூலரின் மந்திரம். இப்படிப்பட்டவர்களைத் தவிர மற்றவர்களால் ஈசுவர தத்துவத்தைக் காண முடியாது. அதை அநுபவபூர்வமாகக் கிரகிக்க முடியாது என்கிறார் திருமூலர்:

கணக்கறிந்தார்க்கன்றி காணவொண்ணாது
கணக்கறிந்தார்க்கன்றி கைகூடாக் காட்சி



# சிவகாமியின் சபதம்

அமரர் **கல்கி**

## முன்னுரை



நீல வானத்திலிருந்து பூரண சந்திரன் அமுத கிரணங்களைப் பொழிந்து கொண்டிருந்தான். பூவுலகம் மோகன நிலவிலே மூழ்கி அமைதி குடிகொண்டு விளங்கியது. எதிரே எல்லையின்றிப் பரந்து கிடந்த வங்காளக் குடாக் கடலில் சந்திர கிரணங்கள் இந்திர ஜால வித்தை செய்து கொண்டிருந்தன. கரையோரத்தில் சின்னஞ் சிறு அலைகள் அதிக ஓசை செய்து அமைதியைக் குலைக்க விரும்பாதவை போல இலேசான சத்தத்துடன் விழுந்து கொண்டிருந்தன.

கடல் ஓரத்து வெண் மணலில் நாங்கள் உட்கார்ந்திருந்தோம். ரஸிகமணி ஸ்ரீ டி.கே. சிதம்பரநாத முதலியார் அவர்களும் இன்னும் இரு நண்பர்களும் நானும் இருந்தோம். வேறு மனிதர்களோ, பிராணிகளோ கண்ணுக்கெட்டிய தூரம் காணப்படவில்லை.

மாமல்லபுரத்துக் கடற்கரை. பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்னால் நடந்த சம்பவம். ரஸிகமணி அவர்கள் வழக்கம்போல் கவிதையைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்.

**''விதியின் எழுத்தைக் கிழித்தாச்சு! — முன்பு
விட்ட குறை வந்து தொட்டாச்சு!''**

என்ற ஸ்ரீ கோபாலகிருஷ்ண பாரதியாரின் பாடல் வரிகளை அழுத்தம் திருத்தமாக எடுத்துரைத்தார்கள்.

''முன்பு — விட்ட குறை வந்து தொட்டாச்சு!'' என்னும் வரி ஒரு சக்தி வாய்ந்த மந்திரத்தைப் போல் என்னை மதிமயங்கச் செய்தது. அந்தக் கடற்கரை மணலில் அதே மாதிரி வெண்ணிலவில் இதற்கு முன் எத்தனையோ தடவை நான் உட்கார்ந்திருந்ததாகத் தோன்றியது. முந்தைய பிறவிகளில் விட்ட குறைதான் இங்கே என்னைக் கொண்டு வந்து சேர்த்து இன்று இந்தக் கடற்கரை ஓரத்திலே உட்காரச் செய்திருக்கிறது என்றும் தோன்றியது.

கடலிலே ஆயிரமாயிரம் படகுகளும் கப்பல்களும் திடீரென்று காட்சி அளித்தன. கரையிலே கூட்டங் கூட்டமாக ஆடவரும் பெண்டிரும் நடமாடிக் கொண்டிருந்தார்கள். சற்றுத் தூரத்தில் மாட மாளிகைகளும் கூட கோபுரங்களும் எழுந்தன. அவற்றின் உச்சியில் ரிஷபக் கொடிகளும் சிங்கக் கொடிகளும் உல்லாசமாகப் பறந்தன. இனிமை ததும்பிய இசைக் கருவிகளிலிருந்து எழுந்த சங்கீதம் நாற்புறமும் சூழ்ந்து போதையை உண்டாக்கிற்று. கண்ணுக்குத் தெரிந்த பாறைகளில் எல்லாம் சிற்பிகள் கையில் கல்லுளியை வைத்துக் கொண்டு வேலை செய்தார்கள். எங்கேயோ யாரோ காலில் கட்டிய சதங்கை ஒலிக்க நடனமாடிக் கொண்டிருந்தார்கள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் அந்த அகக் காட்சிகள் தெளிவடைந்தன. உருவங்களும் முகங்களும் இனம் தெரியுமாறு எதிரே தோன்றின.

ஆயனரும் சிவகாமியும் மகேந்திர பல்லவரும் மாமல்லரும் பார்த்திபனும் விக்கிரமனும் அருள்மொழியும் குந்தவியும், பொன்னனும் வள்ளியும் கண்ணனும் கமலியும் புலிகேசியும் நாகநந்தியும் என்னுடைய மனக் கண் முன்னால் பவனி வந்தார்கள். அப்படி பவனி வந்தவர்கள் என் உள்ளத்திலேயே குடிபுகுந்து விட்டார்கள்.

இரண்டு தினங்கள் மாமல்லபுரத்தில் தங்கி யிருந்தோம். அற்புத சிற்பங்களைத் தாங்கிய கற்பாறைகளைப் பார்த்தோம். குன்றில் குடைந்தெடுத்த கோயில்களையும் விமானங்களையும் பார்த்தோம். ஒவ்வொரு கல்லும் ஒரு கதை சொல்லிற்று. ஒவ்வொரு சிற்பமும் ஓர் இதிகாசத்தை எடுத்துரைத்தது. பார்க்கப் பார்க்க வியப்பு மிகுந்தது: கேட்கக்



கேட்கப் பரவசமாயிற்று. கையிலே பிடித்த கல்லுளிகளையே மந்திரக் கோல்களாகக் கொண்டு எந்த மகா சிற்பிகள் இத்தகைய மகேந்திர ஜாலங்களைச் செய்தார்களோ என்று நினைத்தபோது அவர்களைக் கையெடுத்துக் கும்பிடத் தோன்றியது. அந்தச் சிற்பிகளிடம் தோன்றிய பக்தியினால் தலை தானாகவே வணங்கிற்று.

*   *   *

"சிவகாமியின் சபதம்" என்னும் பெயர் தாங்கிய இந்த நூலை ஏதேனும் ஒரு வழியிலே பெற்றுக் கையில் ஏந்திக் கொண்டிருக்கும் அன்பர்கள் இது 'அபாரமான புத்தகம்' என்று உடனே தீர்மானித்துவிடக் கூடும். ஆயிரத்துக்கு மேல் பக்கங்கள் உள்ள புத்தகம் அல்லவா? அதற்குத் தகுந்த கனமும் இருக்கத்தானே செய்யும்?

இவ்வளவு பாரத்தையும் ஏறக்குறைய பன்னிரண்டு வருஷ காலம் என் உள்ளத்தில் தாங்கிக் கொண்டிருந்தேன். ''சிவகாமியின் சபத''த்தில் கடைசிப் பாகம் கடைசி அத்தியாயம் கடைசி வரியை எழுதி ''முற்றும்'' என்று கொட்டை எழுத்தில் போட்ட பிறகுதான் பன்னிரண்டு ஆண்டுகளாக நான் சுமந்து கொண்டிருந்த பாரம் என் அகத்திலிருந்து நீங்கியது.

மகேந்திரரும் மாமல்லரும் ஆயனரும் சிவகாமியும் பரஞ்சோதியும் பார்த்திபனும் விக்கிரமனும் குந்தவியும் மற்றும் பல கதாபாத்திரங்களும் என் நெஞ்சிலிருந்து கீழிறங்கி, ''போய் வருகிறோம்'' என்று அருமையோடு சொல்லி விடைபெற்றுக் கொண்டு சென்றார்கள்.

ஆகா! அந்தப் பழந் தமிழ் நாட்டுப் பிரமுகர்கள், பெயருக்கும் புகழுக்கும் மிக்க ஆசை கொண்டவர்கள் போலும்! என்றென்றும் அழியாத கற்பாறையிலே அல்லவா தங்களுடைய புகழை அவர்கள் எழுதி வைத்து விட்டுச் சென்றார்கள்! வேண்டுமென்று செய்தார்களோ, வேண்டாமலே செய்தார்களோ, நினைத்துச் செய்தார்களோ, நினையாமலே செய்தார்களோ — அவர்கள் செய்துவைத்த காரியங்கள் நீடூழி காலம் அவர்களுடைய நினைவை நிலைநாட்டுமாறு அமைந்திருக்கின்றன.

*   *   *

பல காலமாகப் பண்டைத் தமிழகத்தின் பெருமையைப் பற்றியும் பண்பாட்டின் சிறப்பைப் பற்றியும் கேள்விப்பட்டுக் கொண்டிருந்தேன்; படித்துமிருந்தேன். ஆனாலும், கேட்டது படித்தது எதுவும் உள்ளத்தில் நன்கு பதியவில்லை! நம்பிக்கையும் அவ்வளவாக உண்டாகவில்லை.

மகாபலிபுரம் என்று வழங்கும் மாமல்லபுரத்துக்குச் சென்று கண்ணால் நேரிலே பார்த்த பிறகு நம்பிக்கை ஏற்பட்டது. ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னால் நமது செந்தமிழ் நாட்டில் இவ்வளவு அற்புதமான சிற்பங்களைச் செய்த மகா சிற்பிகள் இருந்தார்கள்! அவர்களை ஆதரித்துப் போஷித்து உற்சாகப்படுத்தி அவர்களுடைய கலைத் திறனைப் பிரகாசிக்கச் செய்த மன்னர்களும் இருந்தார்கள்!

அப்படியென்றால், அந்தக் காலத்தில் தமிழகத்தின் பண்பாடும் சமூக வாழ்க்கையும் எவ்வளவு மேம்பட்டிருக்க வேண்டும்! அத்தகைய மேம்பாட்டை ஒரு சமூகம் அடைய வேண்டுமானால், அதற்கு எத்தனை நூற்றாண்டுகளுக்கு முன்னாலிருந்து அச்சமூகத்திலே கலையும் கல்வியும் நல்லரசாட்சியும் நல்லொழுக்கமும் வளர்ந்து வந்திருக்க வேண்டும்! இதையெல்





லாம் நினைக்க நினைக்கப் பண்டைத் தமிழ் நாட்டில் வாழ்ந்த நம் மூதாதையர்களிடம் பக்தியும் மரியாதையும் பொங்கி வளர்ந்தன.

தமிழகத்தின் பழம் பெருமையைப் பற்றிக் கேள்விப்பட்டதெல்லாம் உண்மை என்பது மட்டுமல்ல; இதுவரை உண்மையை ஓரளவு குறைத்துச் சொல்லியே வந்திருக்கிறார்கள் என்று தோன்றியது.

''கோயில்களும் கோபுரங்களும் குன்றைக் குடைந்தெடுத்த விமானங்களும் பாறைச் சிற்பங்களும் அந்த நாளைய மன்னர்களின் கொடுங்கோன்மை மூலமாகத் தோன்றியவை' என்று ஒரு சிலர் கூறியதையும் கேட்டிருந்தேன். அந்தக் கொள்கை முற்றிலும் அபத்தமானது என்ற முடிவுக்கு வந்தேன். கொடுமையினாலும் பலாத்காரத்தினாலும்



வேறு பல வேலைகளைச் செய்வித்தல் சாத்தியமாயிருக்கலாம் ; ஆனால், இத்தகைய கலை அற்புதங்கள் ஒருநாளும் கொடுமையின் மூலம் உண்டாகியிருக்க முடியாது. கட்டாயப் படுத்தி நிலத்தை உழச் செய்யலாம் ; துணி நெய்யச் செய்யலாம்; வரி கொடுக்கும்படியும் செய்யலாம்; ஆனால், அத்தகைய கட்டாய முறைகளினால் கலை வளர்ந்துவிடாது. குழந்தையை அடித்து அழச்செய்யலாம் ; ஆனால் பாடச் செய்ய முடியாது. 'குழந்தையை அடி மேல் அடியடித்து ஓடச் செய்யலாம்; ஆனால், ஆடச் செய்ய முடியாது.

மாமல்லபுரத்தில் உள்ளது போன்ற சொப்பன சிற்பலோகத்தைப் பலவந்தத்தின் மூலமாகச் சிருஷ்டி செய்திருக்க முடியாது.

எனவே, எந்த வகையிலே சிந்தித்துப் பார்த்தாலும் பழந்தமிழ் மக்களிடம் என்னுடைய பக்தி பெருகி வளர்வதாயிற்று.

* * *

“பார்த்திபன் கனவு'', ''சிவகாமியின் சபதம்'' ஆகிய கதைகளை எழுதி வந்த காலத்தில் இந்தக் காலத்துத் தமிழ் மக்கள் பழந்தமிழ் நாட்டின் பெருமையைத் தெரிந்து கொள்வதில் எவ்வளவு ஆர்வம் கொண்டிருக்கிறார்கள் என்பதையும் அறிந்து கொண்டேன்.

''கல்கி'' பத்திரிகை தொடங்கிய புதிதில், சில நண்பர்கள் தொடர்கதை எழுதும்படி கேட்டார்கள். ''ஆகட்டும்; தொடர்கதை எழுதத்தான் போகிறேன்!'' என்று சொல்லி விட்டு, ''கல்கி''யின் மானேஜரிடம் என்னுடைய உத்தேசத்தைச் சொன்னேன். ''கூடவே கூடாது!'' என்று சொன்னார் நண்பர் சதாசிவம். ''இப்போதே காகிதத்துக்குத் திண்டாட்டமாயிருக்கிறது. தொடர்கதை எழுதினால் எப்படிச் சமாளிப்பது?'' என்றார். ''அந்தக் கவலை உங்களுக்கு வேண்டாம். காகிதத் தேவையைக் குறைக்கக்கூடிய சக்தி வாய்ந்த தொடர்கதை எழுதப் போகிறேன் ! தொடர்கதை ஆரம்பித்துச் சில இதழ்களிலேயே தெரிந்துவிடும்!'' என்றேன். ''அது என்ன அவ்வளவு அதிசயமான கதை?'' என்று கேட்டார். ''தமிழ் நாட்டுச் சரித்திரக் கதை; 'பார்த்திபன் கனவு' என்று பெயர். தமிழ் நாட்டில் நம்மவர்கள் இராஜபுத்திரர்களைப் பற்றியும் மொகலாயர்களைப் பற்றியும் சரித்திரக் கதை எழுதினால் குதூகலத்துடன் படிப்பார்கள். தமிழ் நாட்டுச் சரித்திரம் தமிழர்களுக்கு அவ்வளவாகப் பிடிக்காது. ஆகையால், இந்தத் தொடர் கதையினால் உங்களுக்கு மிக்க சௌகரியம் ஏற்படும்!'' என்றேன்.

நான் கூறியதை நம்பாமல் ஸ்ரீ சதாசிவம் தலையை அசைத்தார்.

அவர் சந்தேகப்பட்டது உறுதியாயிற்று. நான் எண்ணியபடி நடக்கவில்லை. தமிழ் நாட்டுச் சரித்திரக் கதையில் தமிழ் மக்கள் எவ்வளவு ஆர்வம் கொண்டிருக்கிறார்கள் என்று தெரிய வந்தது.

''கல்கி'' மானேஜர் மிகவும் கஷ்டப்பட்டுப் போனார். பம்பாய் எங்கே, கல்கத்தா எங்கே, டில்லி எங்கே என்று நாலு திசைகளிலும் சென்று பத்திரிகைக்குக் காகிதம் வாங்க வேண்டியதாயிற்று.

''பார்த்திபன் கனவு'' முடிந்த பிறகு, ஒருவாறு மன நிம்மதி பெறலாம் என்று பார்த்தால் அதற்கு ஆயனரும் சிவகாமியும் இடங் கொடுக்கவில்லை. மாமல்லபுரத்தில் முதன் முதலில் என் மனக் கண் முன்னால் தோன்றியவர்கள் அவர்களேயாதலால், அவர்களை அலட்சியம் செய்ய முடியவில்லை. எனவே, ''சிவகாமியின் சபதம்'' ஆரம்பமாயிற்று; ஆனால், இலேசில் முடிகிறதாக இல்லை! ஆகா ! பேதை சிவகாமி எளிதில் சபதம் செய்துவிட்டாள். அதை நிறைவேற்றி வைப்பதற்கு மாமல்லர் ஒன்பது ஆண்டுகள் பிரம்மப் பிரயத்தனம் செய்தார்; அந்த வர

வாற்றை எழுதி முடிப்பதற்கோ எனக்கு இத்தனை காலம் ஆயிற்று.

* * *

**வா**ரப் பத்திரிகையில் தொடர்கதை படிப்பது என்பது அவ்வளவு சுலபமான காரியம் அல்ல. ஒரு வாரத்தில் வெளியான கதைப் பகுதியைப் படித்த பிறகு, அடுத்த பகுதிக்கு ஒரு வாரம் வரையில் பொறுமையுடன் காத்திருக்க வேண்டும். பழைய நிகழ்ச்சிகளையெல்லாம் ஞாபகம் வைத்திருக்க வேண்டும். இந்தத் தொல்லைகளையெல்லாம் பொருட்படுத்தாமல் மேற்படி தொடர்கதைகளை வாரா வாரம் படித்து என்னை ஊக்கப்படுத்தி வந்த பதினாயிரக்கணக்கான தமிழ் அன்பர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். வாசகர்களின் ஆர்வமும் ஊக்கமுமே இந்த இரு கதைகளையும் எழுதி முடிப்பதற்கு உறுதுணையாயிருந்தன.

தொடர்கதை படிப்பதற்கு வேண்டிய பொறுமை இருக்கும் என்று எதிர்பார்க்க முடியாத தமிழ் நாட்டுப் பிரமுகர்கள் சிலர் இந்தச் சரித்திரக் கதைகளைப் படித்து வந்ததாக அறிந்து உற்சாகம் அடைந்தேன்; அவர்களில் ஒருவர் தற்சமயம் சென்னை மாகாணத்தின் உள்நாட்டு மந்திரி பதவி வகிக்கும் டாக்டர் ப. சுப்பராயன் அவர்கள். தொடர்கதை வெளிவந்து கொண்டிருந்த காலத்தில் அவர்களைச் சந்திக்க நேரும்போதெல்லாம் மற்ற விஷயங்களையெல்லாம் விட்டுவிட்டு, "சிவகாமியின் சபதம்" கதையில் சென்ற வாரத்தில் வந்திருக்கும் நிகழ்ச்சிகளைப் பற்றியும், அடுத்த வாரத்தில் வரலாமென்று ஊகித்த நிகழ்ச்சிகளைப் பற்றியும் டாக்டர் அவர்கள் பேசுவார்கள்.

அத்தகைய ஊக்கத்தைச் "சிவகாமியின் சபதம்" முடியும் வரையில் இடைவிடாது காட்டி வந்ததுடன், இந்த நூலுக்கு ஓர் அழகிய முன்னுரையும் எழுதி உதவியதற்காக டாக்டர் சுப்பராயன் அவர்களுக்குப் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறேன்.

* * *

"**சி**வகாமியின் சபதம்", "பார்த்திபன் கனவு" ஆகிய இரு நூல்களும் சரித்திரக் கதைகள் என்று அடிக்கடி சொல்லப்பட்டு வந்திருக்கின்றன. டாக்டர் ப. சுப்பராயன் அவர்களும் அவ்விதம் குறிப்பிட்டிருக்கிறார்கள். எனவே, அதைப் பற்றிச் சில வார்த்தை சொல்ல வேண்டியிருக்கிறது. அதாவது, மேற்படி நூல்களில் சரித்திரம் எவ்வளவு, கதை எவ்வளவு என்று விளக்கிவிடுவது அவசியமாகிறது.

கதாபாத்திரங்களைப் பற்றி முதலில் சொல்ல விரும்புகிறேன்: மகேந்திர பல்லவர், மாமல்ல நரசிம்மர் இருவரும் தமிழ் நாட்டின் சரித்திரத்தில் புகழ்பெற்ற உண்மையான பாத்திரங்கள். மற்றும் தளபதி பரஞ்சோதியார், வாதாபி புலிகேசி, இலங்கை மானவன்மன், நெடுமாற பாண்டியன், மங்கையர்க்கரசி, குலச்சிறையார் ஆகியவர்கள் சரித்திர பூர்வமானவர்கள். அப்பரும் சம்பந்தரும் சரித்திரப் பிரசித்தியானவர்கள் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

மற்றப்படி இந்த இரண்டு சரித்திரக் கதைகளிலுமே வருகிறவர்கள் அனைவரும் கனவிலோ, கற்பனையிலோ, கல் சொன்ன கதைகளிலோ உதயமான பாத்திரங்கள்.

மகேந்திர பல்லவர், மாமல்ல நரசிம்மர் இருவருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சரித்திரத்தில் பல குறிப்புக்கள் கிடைத்திருக்கின்றன. அந்தக் குறிப்புக்களுக்கு இணங்கக் கூடிய வகையில் இந்தக் கதைகளிலும் அவர்கள் குணாதிசயங்கள் கற்பிக்கப்பட்டிருக்கின்றன.

மன்னர் மன்னர்களான அந்த இருவரும் சிறந்த கல்விமான்கள் என்றும், சித்திரம், சிற்பம், சங்கீதம், நடனம் ஆகிய கலைகளில் அளவில்லாத பற்று உடையவர்கள் என்றும், மாறு வேடம் பூணுவதில் நிகரற்ற திறமையாளர்கள் என்றும், யுத்த தந்திரங்களில் கைதேர்ந்தவர்கள் என்றும், போர்க்களத்தில் மகாவீரர்கள் என்றும் நிர்ணயிப்பதற்கு வேண்டிய ஆதாரங்கள் சரித்திர நிபுணர்



களின் கல்வெட்டு ஆராய்ச்சிகளிலிருந்து கிடைத்திருக்கின்றன.

இந்தக் கதைகளிலே வரும் நிகழ்ச்சிகளில் சில முக்கியமான நிகழ்ச்சிகள் சரித்திர ஆதாரமுடையவை. அவற்றில் முக்கியமானவை : (1) மகேந்திர பல்லவர் முதலில் சமணராயிருந்து பின்னர் அப்பர் சுவாமிகளின் உபதேசம் பெற்றுச் சைவர் ஆனது; (2) வாதாபி புலிகேசி மாபெரும் சைனியத்துடன் தென்னாட்டின் மீது படையெடுத்து வந்து காஞ்சிக் கோட்டையை முற்றுகையிட்டது; (3) புலிகேசி கொள்ளிடக் கரை சென்று அங்கே சேர, பாண்டிய, களப்பாள மன்னர்களைச் சந்தித்தது : (4) காஞ்சிக் கோட்டையைக் கைப்பற்ற முடியாமல் புலிகேசி திரும்பிச் சென்றது: (5) சளுக்கரின் படையெடுப்புக்குப் பழிக்குப் பழி வாங்கும் பொருட்டுப் பல்லவ சைனியம் வாதாபிக்குப் படையெடுத்துச் சென்றது; (6) வாதாபி நகர் மீது படையெடுத்த பல்லவ சைன்யத்துக்குப் பரஞ்சோதி தளபதியாயிருந்தது; (7) பல்லவ சைனியம் வாதாபியைக் கைப்பற்றி அந்நகரத்
















தைத் தீக்கிரையாக்கியது; (8) தளபதி பரஞ்சோதி பிற்காலத்தில் சேனாபதி உத்தியோகத்தை விட்டுத் தமது சொந்தக் கிராமமாகிய திருச்செங்காட்டங்குடிக்குச் சென்று சிவநேசச் செல்வராக வாழ்க்கை நடத்தியது— ஆகிய இவையெல்லாம் சரித்திரபூர்வமான உண்மைச் சம்பவங்கள்.

இந்தச் சம்பவங்கள் நிகழ்ந்த காலத்தில் தென்னாடு கலை வளத்தில் தலைசிறந்து விளங்கியது என்பது சரித்திரம் ஐயமற அறிவிக்கும் உண்மையாகும். சிற்பம், சித்திரம், சங்கீதம், நடனம் ஆகிய அழகுக் கலைகள் எல்லாம் தமிழகத்தில் அப்போது வளம் பெற்றிருந்தன. இந்தக் கலைகளுள், முக்கியமாகச் சிற்பமும் சித்திரமும், விந்திய பர்வதத்திலிருந்து இலங்கை வரையில் ஏறக்குறைய ஒரேவிதமாகப் பரவியிருந்தன என்பதும், ஒரே பாணியில் அமைந்திருந்தன என்பதும் சரித்திர பூர்வமாகத் தெரிய வருகின்றன. அஜந்தாவின் குகை மண்டபங்களிலும் தமிழகத்தில் இப்போது சித்தன்ன வாசல் என வழங்கும் சித்தர் வாச மலையிலும், இலங்கையில் உள்ள ஸ்ரீகிரி மலையிலும் ஒரேவிதமான சித்திரங்கள் — அழியா வர்ணங்களில் எழுதிய அற்புதக் கலைப் பண்பு வாய்ந்த சித்திரங்கள்— காணப்படுகின்றன. உலகத்தில் வேறு எங்கேயும் இத்தகைய பண்டைச் சித்திரங்களைக் காண முடியாது என்று கலை நிபுணர்கள் சொல்கிறார்கள்.

ஏறக்குறைய ஒரே காலத்தில் அஜந்தாவிலும் எல்லோராவிலும் வாதாபியிலும் கிருஷ்ணை நதிக்கரையிலுள்ள நாகார்ஜுன மலையிலும் மாமல்லபுரத்திலும் குன்றுகளைக் குடைந்து விமானங்கள் அமைக்கும் கலை பரவி மகோந்நத நிலையை அடைந்திருந்தது என்பதையும் சரித்திர ஆராய்ச்சியிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

* * *

மேற்கூறிய சரித்திர உண்மைகளையெல்லாம் இந்த இரண்டு கதைகளிலும் கொண்டு வர முயன்றதன் பயனாக வாழ்க்கையிலேயே ஒப்பற்ற அநுபவம் ஒன்று எனக்குக் கிடைத்தது. அதுதான் அஜந்தா யாத்திரை. அஜந்தா சித்திரங்களைப் பற்றிப் புத்தகங்களில் படித்ததை ஆதாரமாகக் கொண்டே, ''சிவகாமியின் சபதம்'' எழுதுவதற்கு ஆரம்பித்தேன். ஆனால், கதையை எழுதிக் கொண்டு போகப் போக, ஆயனருக்குப் பிடித்தது போன்ற அஜந்தா வைத்தியம் என்னையும் பிடித்துக் கொண்டது. கதையில் நேர்முகமாக அஜந்தாவைப் பற்றிச் சொல்லும் கட்டம் வருவதற்கு முன்னால் அங்குள்ள சித்திரங்களை, அற்புதங்களை நேரிலே பார்த்துவிட வேண்டும் என்ற விருப்பமும் நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டிருந்தது. அந்த விருப்பமும் நிறைவேறுவதற்கு இறைவன் திருவருள் துணை புரிந்தது.

சென்னை
5-3-1948

ரா. கிருஷ்ணமூர்த்தி
'கல்கி'

# ஊரார் குழந்தை

**சுகந்தி**

ஐந்து அடுக்குக் கொண்ட பெரிய டிபன் காரியர் அது. ஒவ்வொன்றிலும் நிறைய உணவு வகைகளை வைத்தால் நன்றாகச் சாப்பிடக் கூடியவர்கள் இரண்டு பேர் வயிறு நிறைய திருப்தியாகச் சாப்பிடலாம்!

அப்படிப்பட்ட டிபன் காரியரில் ஒவ்வொரு பாத்திரத்திலும் சாதம், சாம்பார், ரசம், கூட்டு, கறி, ஊறுகாய் எல்லாம் நிறைய நிறைய எடுத்து வைத்துக் கொண்டு வரும் பொழுதே சாரதாவுக்கு அழுகையும் துக்கமும் உள்ளுக்குள் போட்டி போட்டுக் கொண்டு வந்தது. கேசரியை ஓர் இலையில் வைத்து மடித்து மேல் பாத்திரத்தில் வைத்து மூடும் பொழுது தன்னை அடக்கிக் கொள்ள முடியாமல் 'ஓ'வென்று அழுதுவிட்டாள் அவள்.

பாத்திரத்தை அப்படியே வைத்துவிட்டு அடுத்த அறைக்கு ஓடினாள் சாரதா.

அங்கே கிழித்துப் போடப்பட்ட நாராகக் கிடந்தான் குழந்தை குமார்.

கைகாலெல்லாம் குச்சி குச்சியாக இருந்தது குழந்தைக்கு. சதைப் பிடிப்பே இல்லை உடம்பில். ஏதாவது ஒரு வியாதி மாற்றி மாற்றி வந்து அவனை வருத்திக்கொண்டேயிருந்தது பாவம்! வாரத்தில் இரண்டு நாட்கள் அவன் பள்ளிக்குப் போனாலே அபூர்வம். அப்படித்தான் அவனால் பள்ளிக்குப் போக முடிகிறது என்றே என்னவோ பகவான் கொள்ளை அறிவைக் கொடுத்திருந்தார் குழந்தைக்கு.

இப்பொழுது அவனுக்கு ஜுரம் வந்து பத்து நாட்களுக்கும் மேலாகிவிட்டது. ஏற்கனவே துர்பலமானவன் குழந்தை. பத்து நாட்கள் காய்ச்சலில் அன்ன ஆகாரமில்லாமல் குழந்தை எலும்புகளை எண்ணும்படியாகி விட்டான். படுத்துக் கொண்டே பரிதாபமாகப் பார்க்கும்பொழுது சாரதா பிழிய, பிழிய அழுது விடுவாள்.

தினசரி அவள் கணவன் நாராயணன் ஆபீஸ் செல்லும் பொழுது குழந்தை கன்னத்தில் செல்லமாக ஒரு முத்தம் கொடுப்பான். அவனைக் கட்டிக் கொண்டு, "அப்பா ஆபீஸிலேயிருந்து வர்றச்சே குழந்தைக்கு என்ன வாங்கிண்டு வரணும்?" என்று கேட்பான் நாராயணன்.

"லட்டு!" என்பான் குமார்.

சாயங்காலம் சாரதாவுக்கு மல்லிகைப் பூ வாங்கிக் கொண்டு வர மறந்தாலும் மறப்பானே தவிர குழந்தை கேட்ட லட்டுவை வாங்கிக் கொண்டு வர மறக்க மாட்டான் நாராயணன்.

தன்னொத்த குழந்தைகளுடன் வீதியில் விளையாடிக் கொண்டிருப்பான் குமார். அப்பா தெருக் கோடியில் வருவதைப் பார்ப்பான். அவ்வளவுதான்; 'அப்பா' என்று விளித்தபடி ஓடியே வந்து நாராயணனைக் கட்டிக் கொள்வான். பின்னாடியே மற்றக் குழந்தைகளும் ஓடியே வரும்!

தான் வாங்கி வந்ததைக் குழந்தையிடம் கொடுப்பான் நாராயணன். எல்லாக் குழந்தைகளும் குமாரின் கையில் உள்ள தின்பண்டத்தையே பார்த்துக் கொண்டிருக்கும். அவன் சாப்பிடும் பொழுது கீழே கொஞ்சம் விழாதா, அதை நாம் சாப்பிடமாட்டோமா என்று பார்த்துக் கொண்டிருக்கும்.

"கீழே போடாமே எல்லாத்தையும் தின்னுடா ராஜா!" என்பான் நாராயணன்.

அதைப் பார்க்கிற சாரதாவுக்கு என்னவோ போலிருக்கும். அவள் நாராயணனிடம், "எல்லாக் குழந்தைகளும் இருக்கும் பொழுது நம் குழந்தைக்கு மட்டும் சாப்பிட ஒன்றும் கொடுக்காதீர்கள்!" 'நமக்கில்லையே' என்று அந்தக் குழந்தைகளின் மனம் கஷ்டப்படும். இல்லை, கொஞ்சம் கொஞ்சமாவது அவர்களுக்குக் கொடுத்துவிட்டு அப்புறம் நம் குழந்தைக்குக் கொடுங்கள்!" என்பாள்.

அதற்கு நாராயணன், "இதோ பார், சாரதா! நீ சொல்வது போல் நான் எல்லாக் குழந்தைகளுக்கும் கொடுத்தேன் என்று வைத்துக் கொள். தினம் நான் ஆபீஸிலிருந்து வரும் பொழுது 'மாமா அப்பச்சி வாங்கிண்டு வரார்!' என்று எதிர்பார்த்து ஓடி வரும். ஒரு நாள் கொடுக்கலாம், இரண்டு நாள் கொடுக்கலாம். தினசரி கொடுக்க முடியுமா? எதையும் பழக்கப் படுத்திவிடக் கூடாது, சாரதா.....! பிறகு அது பெரிய தொந்தரவாகிவிடும்!" என்று கூறிவிட்டான்.

இப்பொழுது குழந்தைக்கு உடம்புக்கு ஜுரம் வந்துவிட்டதும் எதையெல்லாமோ எண்ணி மனம் குமைந்தாள் சாரதா. மற்ற குழந்தைகளுக்குக் கொடுக்காமல் அவர்கள் எதிரே தான் மட்டும் சாப்பிட்டதால்தான் அவனுக்கு உடம்புக்கு வந்துவிட்டதோ என நினைத்தாள் அவள். அந்தக் குழந்தைகள் எல்லாம் ஏழைக் குழந்தைகள். சிலவற்றின் வீட்டில் காலையில்கூடக் காப்பி கிடையாது. இரவில், ஏன் பகலில்கூட சில சமயம் மோர் சாதமும் ஊறுகாயும்தான். விதம் விதமாக அப்பா வாங்கிக் கொண்டு வருவதைக் குமார் சாப்பிடுவதைப் பார்த்து அந்த ஏழைக் குழந்தைகளின் மனம் என்ன பாடுபட்டிருக்குமோ?....

"அம்மா! அம்மா!"

அழைத்தது குழந்தை குமாரல்ல.

சாப்பாடு எடுத்துச் செல்லும் கூடைக்காரிதான். சாப்பாடு காரியரை எடுத்துக் கொண்டு போய் அவளிடம் கொடுத்தாள் சாரதா. அப்பொழுது அவள் அழுதே விட்டாள்.

அவள் கணவன் நாராயணனுடன் ஆபீஸில் சாப்பிடுகிற நண்பர்களுக்கெல்லாம் தினசரி பெரிய பெரிய காரியரில் விதம் விதமான சாப்பாடு வருகிறதாம்! அவர்களுடன் உட்கார்ந்து தயிர் சாதத்தைச் சாப்பிட அவனுக்கு வெட்கமாயிருக்கிறதாம்!.... அவனுக்கும் அது மாதிரியெல்லாம் சாப்பாடு அனுப்ப வேண்டுமாம். பரணி விருந்து காரியரைக் கீழே எடுத்து வைத்து விட்டான்.

குழந்தை ஜலபானம்கூடச் செய்யாமல், ஒரு பருக்கை சாதம்கூடச் சாப்பிடாமல் படுத்துக்கொண்டிருக்கும் பொழுது சாம்பார், ரசம், கறி, கூட்டு, ஸ்வீட் அது இது என்று நண்பர்களின் எதிரே போலிக் கௌரவத்தைப் பெரிதாக எண்ணிச் சாப்பிட அவருக்கு எப்படித்தான் மனம் வருகிறதோ என்று வருந்துவாள் சாரதா. இயந்திரம் போல் அவைகளை அவள் தயாரித்தாளேயொழிய உப்பு போதுமா என்று பார்க்கக்கூட ஒரு துளி வாயில் போட்டுக் கொள்ளவில்லை.

குழந்தைக்கு ஹார்லிக்ஸ் கரைத்து எடுத்துச் சென்றாள் சாரதா. அவன் விழித்துக் கொண்டிருந்தான். ஸ்பூனில் கொஞ்சம் கொஞ்சமாகக் கொடுத்தாள். 'மடமட'வென்று எல்லாவற்றையும் குடித்து விட்டான் குழந்தை. ஆச்சரியமாகவும் ஆனந்தமாகவும் இருந்தது சாரதாவுக்கு.

"அப்புறமா எனக்கு ரசம் சாதம் போடறியாம்மா?"

"போடறேண்டா ராஜா!" என்றாள் சாரதா.

"கரைச்சு வேண்டாம்....! நன்னு பெசைஞ்சு!" என்றான் குமார்.

"போடறேன், ராஜா, போடறேன்!" என்று சந்தோஷமாகச் சொன்ன சாரதா குழந்தையின் உடம்பைத் தொட்டுப் பார்த்தாள். ஜுரமில்லை. சூடு குறைந்திருந்தது. சாரதாவின் கண்களில் சந்தோஷத்தால் கண்ணீர் நிறைந்திருந்தது.

"தொட்டுக்க நார்த்தங்காய்?"

"போடறேண்டா குமார்!"

"சுட்ட அப்பளாம்?"

"அதுவும்!" என்ற சாரதா குழந்தைக்கு ரசம் சாதம் பிசைந்து கொண்டு வர எழுந்த பொழுது வாசலில் 'படபட'வென்று சத்தமிட்டுக் கொண்டு ஓர் ஆட்டோ ரிக்ஷா வந்து நிற்பது கேட்டது.

வாசலில் வந்து பார்த்தாள் சாரதா.

அவள் கணவன் நாராயணன்தான். ஆட்டோ ரிக்ஷாவிலிருந்து இறங்கிக் கொண்டிருந்தான். அவனை ஒரு கையால் பிடித்து மறு கையால் அந்தப் பெரிய





## திரும்பிய வீரரும் கிளம்புகின்ற குழுவும்

உலகத்தையே பின்னணியாகக் கொண்டிருக்கிறது விண்வெளி விஞ்ஞானக் கூடம் இந்தப் படத்தில். 430 கிலோமீட்டர் உயரத்தில் உலகத்தைச் சுற்றி வந்து கொண்டிருக்கும் இந்த விஞ்ஞானக் கூடத்தினை கோன்ராட், வெய்ட்ஸ், கெர்வின் ஆகிய மூன்று விண்வெளிப் பயணிகளும் இருபத்தெட்டு நாட்களுக்குத் தங்கள் இல்லமாகக்கொண்டிருந்தனர். அவர்கள் விண்வெளியில் நடந்ததும் இந்த விஞ்ஞானக் கூடத்தில் ஏற்பட்ட சில கோளாறுகளைச் சரி செய்ததும் சரித்திர முக்கியத்துவம் பெற்றுவிட்டன. பூமிக்குத் திரும்ப விண்கலத்தில் நுழைந்து அதனை இந்த விஞ்ஞானக் கூடத்திலிருந்து பிரித்துக் கொண்டனர். இறங்கத் தொடங்கு முன் விஞ்ஞானக் கூடத்தை, விண்கலத்திலிருந்த படியே ஒரு முறை வலம் வந்தனர். அப்போது எடுக்கப்பட்ட புகைப்படம் இது.

இந்த விஞ்ஞானக் கூடத்தில் மேலும் பல நாட்கள் தங்கி விஞ்ஞானச் சோதனைகளைச் செய்து திரும்ப இரண்டாவது விண்வெளிக் குழு இம்மாதம் இருபத்தெட்டாம் தேதி புறப்படலாம் என எதிர்பார்க்கப்படுகிறது. மூவர் அடங்கிய இக்குழுவினர் மொத்தம் ஐம்பத்தாறு நாட்கள் இவ்வுலகத்தைத் துறந்து இருப்பதெனத் திட்டம் திட்டப்பட்டிருக்கிறது. — அமெரிக்கத் தகவல் நிலையம்

டிபன் காரியரை எடுத்தபடி யாரோ ஒருவர் வந்தார்.

கணவனைப் பார்த்தாள் சாரதா.... அவ்வளவுதான்! அடுத்த கணம், ''ஐயோ! உங்களுக்கு என்ன?'' என்று கத்தியபடி அவனை நோக்கி ஓடினாள்.

நாராயணன் இறந்த உடைகளும் மண்ணுமாகக் காட்சி அளித்தான். சிகை கலைந்து கிடந்தது. முகத்தில் கையில் எல்லாம் ஒன்றிரண்டு காயங்கள்!..... அவைகளிலிருந்து ரத்தம் கசிந்து கொண்டிருந்தது.

''உங்கள் கணவரைப் பிள்ளை பிடிக்கிறவன் என்றெண்ணி எல்லோரும் நைய அடித்து விட்டார்களம்மா!'' என்றார் கூட வந்தவர்.

''இவரையா? இவரைப் பார்த்தால் அப்படியா தெரிகிறது?'' என்ற சாரதா கணவனைக் கைத் தாங்கலாக உள்ளே அழைத்துச் சென்றுசனிசேரில் படுக்க வைத்து மின் விசிறியைப் போட்டாள்.

''என்னால்கூடத்தானம்மா நம்ப முடியவில்லை..... ஆனால் இவர் செய்கை எல்லோரையும் அப்படித்தானம்மா நினைக்க வைத்திருக்கும்!'' என்றார் கூட வந்தவர்.

ஒன்றும் புரியாமல் விழித்தாள் சாரதா.

''இப்போ, ஒரு வாரமாக இந்த டிபன்காரியரில் சாப்பாடு எடுத்துக் கொண்டு பள்ளி ஒன்றுக்கு வந்து கொண்டிருந்தாராம் இவர்... குழந்தைகளை அழைத்துச் சாப்பாடு போடு வாராம். ஊர்க் குழந்தைக விடம் இவருக்கு என்ன அக்கறை என்று எண்ணினார்களாம் பார்ப்பவர்கள்.... இன்று ஒரு குழந்தைக்குச் சாப்பாடு போட அருகில் உள்ள பூங்காவுக்கு இவர் அழைத்துச் செல்வதைப் பார்த்துவிட்டு, 'குழந்தைகளுக்குச் சாப்பாட்டில் ஆசை காட்டிப் பிடித்துக் கொண்டு போகப் பார்க்கிறான்!' என்றெண்ணி இவரை 'அடி அடி' யென்று அடித்து விட்டார்களம்மா!''

''என்ன இதெல்லாம்? எனக்கு ஒன்றும் புரியவில்லையே!'' என்பது போல் கணவரைப் பார்த்தாள் சாரதா.

''நான் வகை வகையாகச் சாப்பிடவோ நண்பர்களிடம் போலி கௌரவம் பாராட்டவோ காரியரில் சாப்பாடு அனுப்பும்படி சொல்லவில்லை சாரதா...! மற்றக் குழந்தைகளை ஏங்கவிட்டு, அவர்களுக்கு ஒன்றும் கொடுக்காமல், நம் குழந்தைக்கு மட்டும் தின்னக் கொடுத்ததால்தான் நம் குழந்தைக்கு உடம்புக்கு வந்துவிட்டதோ என்று எண்ணினேன் சாரதா...! அதனால் அதற்குப் பிராயச்சித்தமாக ஊரார் குழந்தையை ஊட்டி வளர்க்க நினைத்துத்தான் தினசரி நன்றாகச் சமைத்துக் காரியரில் சாப்பாடு எனக்கு அனுப்பும்படி கூறினேன்.... அதை அருகிலுள்ள பள்ளிக்கூடத்துக்கு எடுத்துச் சென்று குழந்தைகளுக்குப் போட்டேன், சாரதா! என் நல்லெண்ணத்தைப் புரிந்து கொள்ளாமல் என்னைப் பிள்ளை பிடிக்கிறவன் என்றெண்ணி அடித்துவிட்டார்கள் சாரதா!..... இந்த அடி எனக்கு வேண்டியதுதான். எத்தனை குழந்தைகளின் மனத்தைக் கஷ்டப்படுத்தியிருப்பேன் நான்?'' என்றான் நாராயணன்.

''எனக்கு மோர் சாதமும் போடறியாம்மா?'' என்று கேட்டபடி அங்கே வந்தான் குழந்தை குமார்.

''ராஜாவுக்கு உடம்பு குணமாயிடுத்தா?'' என்று கேட்ட நாராயணன், ''சாரதா, எல்லாக் குழந்தைகளுக்கும் நாளைக்கு நம்ம வீட்டிலே வடை பாயசத்தோட சாப்பாடு!'' என்றான்.





# ஜிவ்..ஜிவ்..ஜிப்!

ஜிவ்வென்று மூடிக்கொள்கிறது. ஜிவ்வென்று திறக்கிறது – ஜிப்.

யுவதிகளின் ஜாக்கெட், பர்ஸ், கைப்பை, டம்பப் பை, கூடாரம், பெட்டி, படுக்கை, பாண்ட் என்று பலப் பல பொருள்களிலும் இன்று ஜிப் பயன்படுகிறது. ஆனால் இது முதன் முதலில் கண்டு பிடிக்கப்பட்ட போது இப்படியெல்லாம் இதற்கு இத்தனை உபயோகம் இருக்கும் என்று யார் எதிர்பார்த்தார்கள்?

சுமார் நூறு வருஷங்களுக்கு முன்னால் ஜட்ஸன் என்பவர் தமது காலணியைப் போட்டுக் கொண்டு அதை அவற்றுக்குரிய கொக்கிகளால் பிணைக்க முயன்று கொண்டிருந்தார். லம்பாகோ என்ற தசை நோயால் பீடிக்கப்பட்டிருந்த அவருக்குத் தொடைகளின் மேல்புறத்தில் ஒரே வலி. குனிய முடியவில்லை. கொக்கிகளைப் பூட்ஸின் கண்களில் மாட்ட முடியவில்லை. இணறினார், சபித்தார், இட்டித் தீர்த்தார். கடைசியில் வெறுப்படைந்து, 'வெளியே போவது என்றால்தானே இந்தச் சனியனை அணிய வேண்டும்? வெளியே போகாமலே இருந்து விடுகிறேன்' என்று கோபத்துடன் பூட்ஸ்களை 'விசிறி' அடித்துவிட்டு அக்கடா என்று சாய்ந்தார் நாற்காலியில்.

## கண்டுபிடிப்பு

புதிதாக எதையாவது உருவாக்குவதில் ஆர்வமுள்ள மனிதர் ஜட்ஸன். வெளியே போக முடியவில்லையே என்று வருத்தத்துடன் அமர்ந்திருந்த அவருக்கு பூட்ஸின் கண்களில் கொக்கிகளைச் சுலபமாக மாட்டும் உபாயத்தைக் கண்டுபிடித்தால் என்ன என்று தோன்றியது. மேலும் கீழுமாக நழுவும் ஓர் உபகரணத்தை இணைத்து அதன் உதவியால் பூட்ஸின் கண்களில் கொக்கிகளை மாட்டி விட முடியாதா என்று யோசித்தார்.

அதன்படியே ஒரு சாதனத்தைத் தயாரித்தார். புதிய கண்டுபிடிப்புகளுக்காக நடத்தப்பட்ட ஒரு கண்காட்சியில் இடம் பெற்ற இவரது இச்சாதனம் ஒரு தயாரிப்பாளரின் மனத்தைக் கவர்ந்தது. அதன் உற்பத்திக்குப் பண முதலீடு செய்யவும் விற்பனைக்கு வழி வகுக்கவும் முன்வந்தார். புதுமையான இந்த உபகரணத்தை வாங்கச் சிலர் முன்வந்தார்கள்.

## மானத்தை வாங்கியது

ஆனால் இது அதிகப் பிராபல்யம் அடையவில்லை. காரணம், இது இமர் இடரென்று வேண்டாத சமயங்களில் திறந்து கொண்டு பிராணனை (சில சமயம் மானத்தை) வாங்கியது. துணிமணிகளில் பொருத்தப் பட்டிருந்தால் துவைத்து எடுத்ததும் இது ஒரு சிறு உலோக உருண்டையாக மாறி விட்டிருந்தது.

ஆக இதை உற்பத்தி செய்த நிறுவனம் திவாலாகும் நிலை நோக்கி விரைந்து சென்று கொண்டிருந்தது. முதலாளி அந்நிறுவனத்தில் பணியாற்றிய ஒரு பொறி இயல் நிபுணரை அழைத்தார். "இதோ பார், இதை நம்பிக்கைக்கு உகந்ததாகவும் துவைப்பதைத் தாங்கக்கூடியதாகவும் உருமாற்று ; இல்லையானால் கடையை மூடிக் கொண்டு நாம் இருவருமே நடுத் தெருவில் நிற்க வேண்டியதுதான்" என்றார்.

## முன்னேற்றங்கள்

அந்நிபுணர் சில மாறுதல்களைச் செய்து அபார வெற்றி கண்டதன் பலனாக ஏராளமான 'ஆர்டர்'கள் குவிந்தன. மேலும் இரு பொறி இயல் நிபுணர்களை வேலைக்கு அமர்த்திக் கொள்ள வேண்டியதாயிற்று.

இதனால் அந்தப் பொறி இயல் நிபுணர் மேலும் உற்சாகமடைந்து மேலும் சில மாற்றங்களைச் செய்தார். துணிமணிகளைப் பொருத்துவதில் பெரும் புகழ் பெற்றிருந்த கொக்கிகளை நீக்கி இப்போது நாம் உணர்ந்தறிந்துள்ள 'ஜிப்'பை உருவாக்கினார். பொறி இயல் நிபுணர்கள் பெயர் வைப்பதில் நிபுணர்களாக இருக்க மாட்டார்கள் என்பதை ஜிப்பின் சரித்திரம் நிரூபிக்கிறது. அந்த நிபுணர் தம்



கண்டுபிடிப்புக்கு வைத்த பெயர், ''கொக்கியில்லாத தெ. 2''! முன்னேற்றங்களுடன் கூடிய இரண்டாவது கண்டுபிடிப்பு என்ற அளவில் பெயர் பொருத்தம்தான்... ஆனால் இந்தப் பெயரே ஜிப்பை அல்பாயுவில் மடியச் செய்திருக்கும் என்பதில் ஐயம் இல்லை.

## பெயர் வந்த விதம்

மழை காலத்தில் பூட்ஸுக்குமேல் தரிக்கிற, முழங்கால் வரை உயர்ந்த காலணி ஒன்றுண்டு. அதில் இந்தச் சாதனம் பொருத்தப்பட்டு ஒரு வசதான கனவானிடம் போய்ச் சேர்ந்தது. அவருக்கு ஓரே உற்சாகம். இந்தப் புதுமையைப் பலருக்குக் காட்டுகிற வகையில் பக்கவாட்டில் அமைந்திருந்த ஜிப்பின் பிடியைப் பற்றிக்கொண்டு அதை மேலும் கீழுமாய் உயர்த்தித் தாழ்த்துவதில் அபார ஆசை கொண்டவராய் விளங்கினார். அப்படி மேலும் கீழுமாய் இழுக்கும்போதெல்லாம், ''ஜிப்.... ஜிப்.....'' என்று உற்சாகக் கூச்சலிடுவார்.

சரியான அமைப்பில் உருவாகிவிட்ட ஜிப்புக்குப் பொருத்தமான பெயரும் கிடைத்துவிட்டது!

இன்றைய தினம் உங்கள் வீட்டில் எத்தனை ஜிப்கள் உள்ளன என்று கணக்கெடுத்துப் பாருங்கள். ஜிப் தயாரிப்பு ஒரு பெரிய தொழிலாகி விட்டதன் காரணம் விளங்கும்.

— மாட்ஜ் காஸில்
தமிழாக்கம்:
குட்டி கிருஷ்ணன்





## தங்கத்துக்கு ஒரு புதிய உபயோகம்

ஆபரணங்களுக்குத்தான் பொன் பயன்படுகிறது என்பதில்லை. தொழில் துறையில் அதற்குப் பல உபயோகங்கள் உண்டு. அவற்றுள் புதியதொன்று:

ஜெட் விமானக் கண்ணாடி ஜன்னல்களின் மீது மெல்லியதாய்த் தங்க முலாம் பூசுகிறார்கள். இந்தத் தங்க ரேகையின் கனம், எழுதும் காகிதத்தின் கனத்தில் லட்சத்தில் ஒரு பங்குதான் இருக்கும். இத்தனை இலேசானதால் கண்ணாடி வழியே வெளியே பார்ப்பது பாதிக்கப்படுவதில்லை.

அது சரி, அனுகூலம் என்ன? விமானம் மிக உயரே குளிர்ந்த சூழலில் பறக்கும்போது மின்சாரத்தின் உதவியால் ஜன்னல்களை உஷ்ணப்படுத்த முடியும். ஆதலால் ஜன்னல்களில் பனி படிந்து பிரயாணிகளின் பார்வையை மறைப்பதில்லை.

- ஸ்கானா

## பேசத் தெரியாத பிரதமர்!

செயல் திறன், அறிவாற்றல் எல்லாம் உண்டோ இல்லையோ, பெரிய சொற்பொழிவாளர்கள்தாம் நம் நாட்டில் அரசியல் தலைவர்கள்.

ஆனால் பிரிட்டிஷ் பிரதமராக விளங்கிய ஹெரால்டு மாக்மில்லனுக்குச் சொற்பொழிவு நிகழ்த்துவது என்றாலே பயம்! அதற்கு இரண்டு நாட்கள் முன்பிருந்தே வயிற்றைக் கலக்க ஆரம்பித்து விடுமாம்!

'நாலு பேர் பார்க்கிற மாதிரி எதையும் செய்வது என்றாலே எனக்கு அச்சம்தான். சின்ன வயதில் பார்வையாளர் முன்னிலையில் விளையாட்டு மைதானத்தில் இறங்குவதை வெறுத்தேன். அந்தப் போக்கு இன்றுவரை நீடிக்கிறது' என்றார் அவர் ஒரு முறை பி. பி. ஸி. டெலிவிஷன் உரையாடலில்.





## பணவீக்கத்தால் இது பரவசமடையும்!

ஆயிரம் பத்து ரூபாய் நோட்டுக்களைக் கொடுத்து, 'எண்ணி எடுத்துக்கொள்!' என்று யாராவது சொன்னால், 'கை வலிக்குமே' என்போமா என்ன?

ஆனால் பாங்கு காஷியர்களைக் கேளுங்கள். எண்ணி எண்ணி அலுத்துப் போவது மட்டுமில்லை; விரல்கள் வலிக்கவும் செய்யும் அவர்களுக்கு.

பிரிட்டனில் காகிதம் எண்ணும் கருவி ஒன்று கண்டுபிடித்திருக்கிறார்கள். அது கரன்ஸி நோட்டுக்களை மட்டுமின்றி நோட்டுப் புத்தகக் காகிதங்களையும் எண்ணும். இன்னும் காசோலைகள், பரிசுச் சீட்டுக்கள், ரசீதுகள் போன்ற எந்தக் காகிதக் கற்றையை வேண்டுமானாலும் எண்ணித் தள்ளும். ஒரு நிமிஷத்தில் எட்டாயிரம் தாள்களை எவ்வித தவறுமின்றி எண்ணி விடும்!

-பிரிட்டிஷ் தகவல் நிலையம்

அம்மா
அவங்க பாத்ரூம்
ஏன் அவ்வளவு
நாற்றமடிக்குது
நம்முடையது
எவ்வளவு
வாசனையா
யிருக்கு?

கண்ணு, நாம்
ஓடோனில்
உபயோகிக்கிறோம்




ஓடோனில் துர்நாற்றங்களை உடனடியாக அழிக்கிறது. பாத்ரூம் போன்ற இடங்களைத் தூய்மையாகவும் நறுமணத்துடனும் வைக்கிறது.

ஓடோனில் பல்வேறு நறுமணங்களில் கிடைக்கின்றன. ஓடோனில் வகைவகையான அளவுகளில், டிஜுகளில், டப்பாக்களில் கிடைக்கின்றன.

பல்சாரா
நலமான வாழ்க்கைக்கு
நவீனமான வசதிகள்
BALSARA

CHAITRA-BLS-6 TAM

# ராஜாஜியின் ஜெயில் டைரி

**1922 பிப்ரவரி, 14உ**

செவ்வாய்க்கிழமை: கிருஷ்ணசாமியும் ராமசாமி நாயக்கரும் நேற்று மாலை வந்திருந்தார்கள். மற்றவர்கள் சேலத்திலிருந்து வந்து சேரக் காணோம். அதனால் என்னை வந்து பார்ப்பது இன்னும் முடியாததாக வைத்துக் கொண்டு இன்று வருபவர்களுக்கும் என்னைப் பார்க்க அனுமதி கொடுக்குமாறு நான் ஜெயிலரை வேண்டிக் கொண்டேன். அதில் சிறிது கஷ்டம் ஏற்பட்டது. ஆயினும் இறுதியில் எல்லோரையும் இன்று பார்த்தேன்.

காங்கிரஸ் காரியங்கள் மனத்திற்கு உற்சாகம் அளிக்கக்கூடிய நிலைமையில் காணப்படவில்லை. கோரக்பூர் என்னுமிடத்தில் பலாத்காரம் எழுந்த விஷயமானது எல்லாவற்றையும் முன்னேற விடாமல் நிறுத்தி விட்டது போல் தோன்றிற்று. இந்த விஷயங்களைக் குறித்து முழு விவரமும் கிடைக்கவில்லை. அத்துடன் வெளியே உள்ள நிலைமைக்கும் எனக்கும் தொடர்பில்லை. அதனால் நான் சிறையிலிருந்து கொண்டு எந்த முடிவும் செய்ய இயலாதவனாயிருக்கிறேன். ஆயினும் இந்தச் சமயம் கையைக் கட்டிக் கொண்டு சும்மா இருக்கத் தீர்மானித்து விடக் கூடாது. அரசாங்கத்தார் அடக்குமுறையை அவிழ்த்து விட்டிருக்கும் இந்தச் சமயத்தில் கலப்பமில்லாத இட்டமொன்றை ஜனங்களிடம் சமர்ப்பித்தால் நம்முடைய முன்னேற்றம் எல்லாம் பின்னோட்டமாகவே ஆகிவிடும். ஆயினும் என் மனம் சோர்வு நிலையில் இருப்பதால் சிறிது காலம் சென்ற பிறகுதான் எல்லாவற்றையும் தெளிவாக அறிந்து கொள்ள முடியும் என்று எண்ணுகிறேன். அதற்காக ஆண்டவனைப் பிரார்த்தித்துக் கொள்வேன். என்னுடன் உழைத்த நண்பர்களில் பெரும்பாலோர் சிறைக்குச் சென்று விட்டார்கள். அதனால் விடுதலை பெற்றுள் இப்போது இங்கே தனியாக 'இருப்பதாகத் தோன்றுவதை விட அதிகத் தனிமையே தோன்றும். ஆனால் சகல நண்பர்களும் சிறைக்குப் போய் விட்டால் எத்தனை தனிமை உணர்ச்சி உண்டாயிருக்கும் காந்தியடிகளுக்கு? ஆம், அவர் தன்னந் தனியாகத்தானே விடப்பட்டிருக்கிறார்!

**1922 பிப்ரவரி, 15உ**

புதன்கிழமை: எல்லா மாகாணங்களிலும் தலைவர்கள் எல்லோரும் சிறையிலேயே இருந்து வருகிறார்கள். அலி சகோதரர்களும் கூட அப்படியே. ஆதலால் காந்தியடிகளுடைய தீர்மானமான முடிவுகள் அவ்வளவு சரியாகத் தோன்றவில்லை. அவர்கள் அவருடன் இருந்தபொழுது அவருடைய இயந்திரச் சக்கரங்களை ஓடவொட்டாமல் தடுக்கும் தடைகளாகத் தோன்றினர். இப்பொழுது அவர்கள் இல்லாதபோது தான் அவர்கள் எத்தனை உபயோகமாக இருந்தார்கள் என்பது தெரிய வருகிறது. சாத்விக சட்ட மறுப்பை நிறுத்தி விட்டு அங்கத்தினர் சேர்க்கும் வேலையை மட்டும் மேற்கொள்வது என்பது, போரை விட்டுச் சமாதான நிலைமையை மேற்கொள்வதாகும்.

இன்று காலை ஆறு மணிக்குத்தான் என்னுடைய அறைக் கதவைத் திறந்தார்கள். அதுவரை தூங்கிப்போய்விட்டேன். அதனால் இன்று காலைதான் முதன் முதலாகப் பிரார்த்தனை செய்யாத நாள். அறைகளைத் திறக்கு முன் அதிகாரிகள், ''எழுந்திருங்கள், எழுந்திருங்கள்'' என்று கத்துவது வழக்கம். ஆனால் எங்கள் சௌகரியத்தை உத்தேசித்து எங்கள் இரண்டு மூன்று அறைகள் முன்னால் மட்டும் அவ்வாறு கத்துவது இல்லை. ஜெயிலர் ஏதோ பெரிய வெற்றி யடைந்து விட்டது போல் எண்ணிக் கொண்டு, ''என்ன, ஒத்துழையாமை தூங்கிப் போய் விட்டது போலும்!'' என்று இன்று காலையில் என்னிடம் எக்களிப்புடன் கேட்டார். காந்தியடிகள் சாத்விகச் சட்டமறுப்பு இயக்கத்தை நிறுத்திவிட்ட செய்தியை ஆதாரமாக வைத்தே இவர் இவ்விதம் கூறினார். இவ் விஷயமாக நான் அவரிடம் பேசி என்னுடைய நேரத்தை வீணாக்கவிரும்பவில்லை.



# எஸ்ஐஏ-யின் உலகம்: வாரந்தோறும் 19 நாடுகளின் வழியே 400-க்கு மேற்பட்ட சர்வீஸ்கள்

மற்றெந்த தென்கிழக்கு ஆசிய ஏர்லைனைவிட
நாங்கள் 19 நாடுகளிலுள்ள 23 நகரங்களுக்குப்
போய்வர, 400-க்கும் அதிகமான சர்வீஸ்கள்
நடத்துகிறோம்; உங்களுக்கு உலகின் அதிக
இடங்களைக் காட்டுகிறோம். எங்கள் விமானத்தில்
பயணம் செய்யும்போது, எங்கள்
போயிங் 707 சூப்பர் ஜெட் அல்லது
போயிங் 737 விமானங்களில் கிடைக்கும் அதி
மேலான சொகுசை அனுபவியுங்கள்.
பிரயாணத்தின்போது நாங்கள் வழங்கும்
சொகுசான சௌகரியங்களைப் பற்றி மற்ற
விமானக் கம்பெனிகள் கூடப் பாராட்டுகின்றன
என்றால், அதற்கு எங்கள் 26 ஆண்டு அனுபவமே
காரணம். இன்றே உங்கள் எஸ்ஐஏ பிரயாண
ஏஜெண்டைக் காணுங்கள். எஸ்ஐஏ—
சொகுசான விமானப் பயணத்துக்கு!

சிங்கப்பூர் ஏர்லைன்ஸ் 

எஸ்ஐஏ, ஏர் இந்தியா பில்டிங், நரிமன் பாயிண்ட், பம்பாய் 1.
டெலி: 259951 டெலெக்ஸ்: 011—3887
எஸ்ஐஏ, 70, மவுண்ட் ரோடு, சென்னை 6.
டெலி: 440640 டெலெக்ஸ்: எம்எஸ் 7278

# பொன்வண்டு

ஊதாரி மகனிடம் அவன் தந்தை, ''உன் சொந்த முயற்சியில் ரூபாய் பத்தாயிரம் சம்பாதிக்க முடியுமா?'' என்று சவால் விடப் போக அது ஒரு விபரீதக் கதையாகி, காதலும், தோல்வியும், ஏமாற்றமுமாக வளர்ந்து கடைசியில் ஒருமாதிரி சுபமாக (சுலபமாகவும் கூடத்தான்!) முடிந்துவிடுகிறது. இதுதான் மணியம் பிக்சர்ஸாரின் ''பொன்வண்டு''.

ஜெய் சங்கருக்கு நல்ல சான்ஸ்! ஐந்து பெண்களால் காதலிக்கப்பட்டு, ஒரு காதலிக்குத் தெரியாமல் இன்னொரு காதலியைச் சந்தித்துப் பேசுவது, பழகுவது எல்லாம் நம்பமுடியாத கேலிக்கூத்துக்கள்தான் என்றாலும் ஜெய்சங்கரின் நடிப்பாற்றல் அவற்றைச் சகித்துக் கொள்ளும் ஆற்றலை நமக்கு அளிக்கிறது! 'லேட்டர் வெயினில்' ரொம்ப ரொம்ப லேட்டாகக் கதையைப் புனைந்து கொண்டு (இதைக் கதை யென்று ஒப்புக்கொண்டால்!) அதற்கேற்றபடி நிகழ்ச்சிகளையும் புனைந்து படமாக்கி விட்டார்கள். ஜெய்சங்கர் துள்ளிக் குதித்து, ஓடி, ஆடி, பாடித் துடிப்போடு சண்டை போட்டு, நடிப்பிலும் சக்கைப் போடு போட்டு விட்டார்! பறக்கும் பொன் வண்டின் ஒரு பக்கத்துச் சிறகே அவர்தான்!

காதலிக்கும் பருவத்தைத் தாண்டிய மாதாக வரும் மனோரமா 'பொன்வண்'டின் மறுபுறத்துச் சிறகாக விளங்குகிறார். அவரது துயரப் பெருமூச்சும், ஏக்கப் பார்வையும், பரவசமூட்டும் பேச்சும்... அடேயப்பா! பிரமாதம், போங்கள்! கடைசியில் காதலில் படுதோல்வி அடைந்த பிறகு ''யாருக்காக? — இது யாருக்காக?'' என்று

'யாருக்காக?
இது யாருக்காக?'
என்று
மனோரமா பாடுவது ஒருபுறமிருக்க,
இதை ஒரு கதை எனத் தேர்ந்தெடுத்தது
யாருக்காக? எதற்காக?

நடிகர் திலகத்தைப் போலவே பீடுநடை நடந்து மிடுக்கான ஸ்டைலில் கேட்டு, சொந்தக் குரலில் பாடியிருக்கும் காட்சி, அவரது நடிப்பாற்றலுக்கு ஒரு முத்தாய்ப்பு வைக்கிறது. (அப்பாடலைக் கேட்க முடியாமல் ரசிகப் பெருமக்கள் எழுப்பும் கையொலியும், ஆரவாரமுமே அதற்குத் தக்க சான்று!)

பாரதி, சுபா, வசந்தா, உஷாநந்தினி, ஜெயசித்ரா, ஜெய்குமாரி, கல்பனா - இவர்கள் அனைவரும் இப்படத்தில் தோன்றும் கவர்ச்சி நட்சத்திரங்கள்! அது சரி, பாரதியின் 'மேக்கப்'பும், 'நியூலேவ்' உடையும்... என்ன நாகரிகத்தைச் சேர்ந்தது? (ஒரு வேளை அநாகரிகமோ!)

''பனிமலரோ! குளிர் நிலவோ!'' என்ற ஆலங்குடி சோமுவின் பாடல் இனிமையாக ஒலிக்கிறது.

கதை, வசனம், டைரக்ஷன் ஆகிய பொறுப்புக்களை என். எஸ். மணியம் ஏற்றிருக்கிறார்.

'சோ' சினிமாக் கதாசிரியராக வந்து அவருக்கே உரிய இரு பொருள்படும் வசனங்களைப் பேசிப் படத்தின் குறைகளை யெல்லாம் மறைத்து விடுகிறார். கருணாநிதியும் வெண்ணிற ஆடை மூர்த்தியும், தேங்காய் சீனிவாசனும் அவருக்குப் பக்கபலமாக நின்று நகைச்சுவை விருந்தைச் சுவையாக அளிக்கின்றனர்.

— சாந்தன்



பொன் வண்டின்
ஒரு பக்கத்துச்
சிறகு ஜெய்.
மறு பக்கத்துச் சிறகு
மனோரமா.



# எஸ். மேடம்!

'அன்னம்'

எழும்பூர் மத்திய சர்க்கார் அலுவலகம் ஒன்றில் அன்று தேநீர் விருந்துக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அந்த வருஷம் அதிகாரிகள் பரீட்சையில் வெற்றி பெற்றவர்களைப் பாராட்டும் நிமித்தம் ஆபீஸ் நுண்கலைக் கழகம் அந்த விருந்துக்கு ஏற்பாடு செய்திருந்தது.

ஒவ்வொருவராகப் பேச எழுந்தனர். பரீட்சையில் தேறியவர்களின் அறிவுத் திறனையும் வேலையில் அவர்கள் காட்டிய சுறுசுறுப்பையும் சற்று மிகையாகவே பேசினார்கள்.

கடைசியில் பேச எழுந்தார் தலைவர் கோவர்த்தனன். அவர் அங்கு ஓர் அக்கௌண்ட்ஸ் ஆபீஸர்.

''பரீட்சையில் தேறிய எல்லோருக்கும் என்னுடைய வாழ்த்துக்கள். அவர்கள் எல்லோருமே படிப்படியாக முன்னேறிப் பெரிய நியமனம் பெற்று நீண்ட ஆயுளுடன் வாழ வேண்டும் என்று நான் பிரார்த்திக்கிறேன். முக்கியமாக மிஸஸ் ஜயந்தி சேகரன் முதலாவதாகத் தேறியதில் எனக்கு வியப்பு ஏதும் இல்லை.

அவருடைய வெற்றி எதிர்பார்த்ததுதான். முதல் முறையிலேயே இந்தக் கடினமான பரீட்சையில் இந்தியாவிலேயே முதலாவதாகத் தேர்ச்சி பெற்றதுதான் தனியாகக் குறிப்பிடப்பட வேண்டிய விஷயம். இயல்பாகவே வேலையில் அதிக நாட்டம் கொண்டவர். தம் அலுவல்களைச் சிறு தவறுகூட இல்லாமல் முடிப்பவர். எதையும் ஐயமறத் தெரிந்து கொள்வதில் ஆர்வம் உள்ளவர். அவருடைய அதிர்ஷ்டம், பரீட்சையின் முடிவு தெரிந்த அன்றே ஒரு காலி ஸ்தானத்தில் அதிகாரியாக உயர்த்தப்பட்டு விட்டார். அவர் வெற்றியைப் பாராட்டும் நாம் இன்னும்கூட அதிக ஆனந்தம் அடைந்திருப்போம்.—அவருடைய துணைவர் திரு சேகரனும் இந்தப் பரீட்சையில் வெற்றி பெற்றிருந்தால்....! அடுத்த முறையாவது அவர் தம் மனைவியையே ஆசானாகவும் வழிகாட்டியாகவும் கொண்டு படித்து வெற்றி பெற முயல வேண்டும் என்று பிரத்தியேகமாக அவருக்கு நான் அறிவுரை கூற விரும்புகிறேன்....''

தன்னைப் பற்றிப் பேச ஆரம்பித்தவுடனேயே ஜயந்தி தன் தலையைக் குனிந்து கொண்டாள். தன் கணவனைப் பற்றிப் பேச்சு எழுந்ததும் அவள் கண்கள் சேகரன் உட்கார்ந்திருக்கும் பக்கம் தேடின. அவன் அங்கு இல்லை.

கோவர்த்தனன் பழி வாங்கி விட்டார். அவருக்கு என்றுமே அவனைப் பிடித்ததில்லை. அதுவும் அவர் இன்ஸ்பெக்ஷன் போய் விட்டு வந்த பயணப்படி பில்லில், அவர் சர்க்காரின் கண்களில் மண்ணைத் தூவ முயன்றதை ஆதாரங்களுடன் எடுத்துச் சொல்லிக் கேட்டிருந்த தொகையைப் பாதிக்கும் கீழாகக் குறைத்தபோது மிகவும் ஆத்திரப்பட்டார்.

''இப்போதுதான் அக்கௌண்ட்ஸில் அரிச்சுவடி கற்றுக் கொண்டிருக்கிறாய். எனக்கே விதிக்கொரு விளக்கம் சொல்ல முற்பட்டுவிட்டாயா?'' என்று சீறினார்.

ஜயந்தியும் மௌனியாக நிற்கவில்லை.

''அரிச்சுவடி கூடக் கற்றுக் கொள்ளாதவன்தான் ஸார்! எனக்கே இத்தனை தவறுகள் தெரிகின்றனவே. நன்றாகப் படித்தவர்கள் எடுத்துப் பார்த்தால் எதுவுமே மிஞ்சாது போலிருக்கிறதே!'' என்றான் சூடாக.

அன்று முதல் அவர் அவன் பேச்சில், செயலில் தப்புக் கண்டுபிடிக்கத் தவறவில்லை. அதுவும் தன் பெண் திருமண சம்பந்தமாகத்தான் குறி வைத்திருந்த சேகரன் ஒரு நாள் தனக்கும் ஜயந்திக்கும் திருமணம் என்று பத்திரிகையை நீட்டியபோது அவர் ஆத்திரம் எல்லையைக் கடந்தது.

''ஜயந்தியாவது, பாஸ் பண்ணப் போவதாவது?... இந்தக் குதிரையும் ஓடிற்று என்பது போலப் பரீட்சைக்குப் போய் வந்திருக்கிருள்!'' என்று சொன்னுர்.

''ஏண்டி உன்னை இந்தக் கிழம் சதா கரித்துக் கொட்டுகிறது?'' என்று தன் தோழி விமலா கேட்டபோது ஜயந்தி சிரித்தாள்.

''அவருக்குக் கரிநாக்குடி... அவர் வாழ்த்திருல் பலிக்கவே பலிக்காது. இப்படியே நான் பாஸ் பண்ண மாட்டேன் என்று சொல்லிக் கொண்டிருந்தால் நிச்சயம் நான் பாஸ் செய்து விடுவேன்'' என்ருள் ஜயந்தி.



அவள் சொன்னபடியே ஆயிற்று. அவள் பாஸ் செய்து விட்டாள். சேகரனும் தேர்ச்சி பெற்றிருந்தால் இன்னும் நன்ருக இருந்திருக்கும். ஆனுல் அவன் எத்தனை சொல்லியும் அவன் கேட்காமல் தன் நண்பன் மோகனுடன் திரைப்படத்துக்கும் விளையாட்டுப் பந்தயத்துக்குமாகப் போய்க் காலத்தை வீண் அடித்து விட்டான். ஒரு முறை படித்தாலே மனத்தில் நிலைத்து விடும் அவனுக்கு. ஆனுல் படிக்க மாட்டான். அவன் ஜயந்தி பாஸ் செய்வாள் என்று நினைக்கவில்லை. லீவு போட்டுவிட்டு இராப் பகலாகப் படித்தும் பலர் தேர்வு பெருதபோது, ஆபீஸ் வேலையையும், வீட்டு வேலையையும் சேர்த்துப் பார்த்துக் கொண்டு இவள் என்ன பெரிதாகக் கிழிக்கப் போகிருள் என்று அலட்சியமாக இருந்து விட்டான்.

நினைக்கனித்த ரோஜா மாலையைக் கையில் சுமந்தவாறு ஆபீஸ் வாசலுக்கு வந்தாள் ஜயந்தி. அங்கே அவளுக்காக வழக்கம்போல் சேகரன் காத்திருப்பான் என்று ஓர் அல்ப ஆசை. ஆனுல் அவன் அங்கு இல்லை.

ஒரு டாக்ஸியில் ஏறி வேப்பேரியில் இருந்த அவன் வீட்டுக்கு விரைந்தாள். ஒரு பங்களாவின் 'அவுட் ஹவுஸ்' அது. அந்த வீடு சிறியதாளுலும் தனியாக எல்லா வசதிகளும் உடையது.

வாசற் கதவு திறந்து கிடந்தது. சேகரன் வந்து விட்டான். அவள் சத்தம் செய்யாமல் உள்ளே போனுள். எதையோ யோசித்தபடி அமர்ந்திருந்த அவன் பின்னுல் போய் நின்று தன் கையிலிருந்த மாலையை அவன் கழுத்தில்

போட்டாள். அவன் எழுந்து தன்னை அணைத்துக்கொள்வான் என்று எதிர்பார்த்தாள்.

அவன் 'விருட்' என்று எழுந்தான். ஒற்றைக் கையால் அந்த மாலையைக் கழற்றிப் பக்கத்து மேஜையின்மேல் வைத்தான். தன் இடுப்பை வளைத்துக் கையைக் குவித்துப் போலி வணக்கம் தெரிவித்தான்.

"வாருங்கள்!.... உட்காருங்கள்... என்ன சாப்பிடுகிறீர்கள்? காப்பியா.... ஒவலா?..." எனக் கேலியாகக் கேட்டான்.

ஜயந்தியின் கண்களில் நீர் பொங்கிற்று.

"என்னை ஏன் இப்படிக் கொல்கிறீர்கள்?.. பரீட்சையில் பாஸ் செய்தது என் தவறா?"

"ஐயோ! அப்படி யார் சொன்னது?... பாஸ் பண்ணாததுதான் என் தவறு. கோவர்த்தனம் கூட அப்படித்தானே சொன்னார்."

"நான் எத்தனை முறை படியுங்கள், படியுங்கள் என்று கெஞ்சினேன், புத்தகத்தைக் கையில் எடுத்துக் கொடுத்தபோதெல்லாம் ஒதுக்கித் தள்ளிவிட்டு மோகனோடு நீங்கள் வெளியே போகவில்லையா?"

"தப்புத்தான் மேடம்... இனி அப்படியெல்லாம் நடக்க மாட்டேன். இந்த ஒரு முறை மட்டும் என்னை மன்னித்துவிடுங்கள்!"

ஜயந்திக்கு அழுகை அழுகையாக வந்தது.

"நான் பரீட்சை எழுத மாட்டேன் என்று அடம் பிடித்தேன். நீங்கள்தான் கட்டாயமாகப் பரீட்சை எழுதச் சொல்லி 'அப்ளிகேஷன்' பாரமும் வாங்கிக்-கொடுத்தீர்கள்!"

"சே!...சே!... நீங்கள் பரீட்சை எழுதா விட்டால் வேறு யார் லாயக்காம்? வேலையில் அதிக நாட்டம் கொண்டவர்கள்... எந்தச் சிறு தவறும் தங்கள் வேலையில் இருந்ததில்லை. எல்லாவற்றையும் ஐயமறத் தெரிந்து கொள்ள ஆர்வம் உள்ளவர்கள் நீங்கள். நீங்கள் பரீட்சை எழுதா விட்டால் பாரத சர்க்காரின் ஆடிட் இலாகா என்ன ஆவதாம்?"

"போதும் கேலி... இப்போது என்னை என்ன செய்யச் சொல்கிறீர்கள்? 'பிரமோஷனே வேண்டாம்' என்று எழுதிக் கொடுத்து விடட்டுமா? இல்லை... வேலையே வேண்டாம் என்று ராஜிநாமாச் செய்யட்டுமா?"

"ஐயையோ! அப்படியெல்லாம் நீங்கள் செய்து விடாதீர்கள். கேவலம் இந்தக் குமாஸ்தா வாங்கும் சம்பளம் தங்கள் வீட்டு வாடகைக்குக்கூடப் போதாதே... அப்புறம் தாங்கள் எப்படிக் குடித்தனம் செய்வீர்களாம்!"

ஜயந்தி தன் காதுகளைப் பொத்திக்கொண்டாள்; தலையில் அடித்துக்கொண்டாள்.

"போதும் இந்த நாடகம்... நீங்கள் பழையபடி கலகலப்பாக இருக்கப் போகிறீர்களா இல்லையா?"

"அது எப்படி முடியும்?... நீங்கள் ஆபீஸில் எனக்கு ஸீனியர்... மேலதிகாரி. அங்கே ஒரு மாதிரியும் இங்கே வேறு விதமாகவும் எப்படி நான் நடக்க முடியும்?..."

"அதிகாரியும் இல்லை ஒரு மண்ணுமில்லை. நான் பழைய ஜயந்தி...உங்களுடைய ஜயந்தி. என்றைக்கும் அப்படியே இருக்கத்தான் நான் விரும்புகிறேன்..."

"அப்படியே நினைத்துக் கொள்ளத்தான் நானும் முயற்சி செய்கிறேன். என்னால் முடியவில்லையே! என்ன செய்வேன்?" என்று வெளியே போய்விட்டான் சேகரன்.

ஒரு நாள் சேகரன் இரண்டு மாத லீவுக்கு விண்ணப்பித்தான். வீட்டில் எதுவுமே கூறாமல் அவள் தன் அலுவலகத்தில் வீட்டில் இருந்தபோது, மேஜையின் மேல் வைத்தான். அவளுக்கு மேலே அனுப்பி வைப்பதைத் தவிர வேறு வழி இல்லாமல் போய் விட்டது.

வீடு திரும்பிய ஜயந்தி சேகரனை, "இப்போது எதற்கு லீவு?" என்று கேட்டாள்.

"உங்களுக்கு விருப்பம் இருந்தால் லீவுக்குச் சிபாரிசு செய்யுங்கள். இல்லாவிட்டால் வேண்டாம்."

"என் செக்ஷன் வேண்டாம், வேறு செக்ஷனுக்குப் போகிறீர்களா?"

"ஏன் மேடம்? தங்களுக்கு என் வேலை திருப்தி அளிக்கவில்லையா? தவறு இருந்தால் திருத்திக் கொள்கிறேன்" என்றான் சேகரன். ஜயந்தி மேலே வற்புறுத்தவில்லை.

அவள் மட்டும் அலுவலகத்துக்குப் போனாள். வேலையை ராஜிநாமாச் செய்யவும் துணிவில்லை. எண்ணூறு ரூபாய்க்கு மேல் வரும் ஒரு வேலையை விடுவது எளிது. திரும்பவும் பிடிப்பது இயலாத காரியமாயிற்றே. நாட்கள் ஆக ஆக அவன் மனம் மாறாதா என்று ஜயந்தி ஏங்கினாள்.

அவன் வீட்டில்தான் இருந்தான். அப்படியே பேசாமல் இருந்தால் கூடத் தேவலையே. அவள் வீடு திரும்பும் முன் சுவைபடச் சமைத்து வைத்திருப்பான். அவள் உடையை மாற்றிக் கொண்டு வருவதற்குள் ஆவி பறக்கக் காப்பியை அவள் முன் நீட்டுவான்.

"என்னை ஏன் இப்படிச் சித்திரவதை செய்கிறீர்கள்? நான் என்ன பாவம் செய்தேன்?" என்று பொருமினாள் அவள்.

"வீட்டில் சும்மா உட்கார்ந்திருப் நான். பொழுது போக வேண்டாமா? ஏதோ செய்து வைத்தேன். எத்தனையோ அதிகாரிகள் வீட்டில் பட்லர் இருப்பது இல்லையா? அது போகட்டும்... காப்பி நன்றாக இருக்கிறதா? சர்க்கரை போதுமா?"

அவள் வேதனையுடன் அந்தக் காப்பியை விழுங்கி வைப்பாள். இன்னுமொரு நாள் அவள் தன் தோழிகள் இருவருடன் வீட்டுக்குள் வந்தாள். சேகரன் தான் எங்கேயோ வெளியே போவதாகவும் திரும்ப நேரமாகும் என்றும் சொல்லிவிட்டுப் போயிருந்தான். ஆகவேதான் ஜயந்தி துணிச்சலுடன் தோழிகளை அழைத்து வந்திருந்தாள்.

வீட்டின் சாவிகளில் ஒன்று அவள் கைப்பையில் இருந்தது. கூட வந்த தோழிகள் வீட்டைச் சுற்றிப் பார்க்கும் நிமித்தம் சமையலறையில் நுழைந்தனர். 'காஸ்' அடுப்பில் இரவு உணவு தயாராகச் சமைக்கப்பட்டு எடுத்து வைக்கப்பட்டிருந்தது. பிளாஸ்கில் கொதிக்கக் கொதிக்கக் காப்பி இருந்தது!

"ஜயந்தி கொடுத்து வைத்தவளடி. அவள் மனமறிந்து நடக்கும் ஒரு புருஷன்... எவ்வளவு உதவியாக இருக்கிறார் பார்!" என்று வியந்து போனாள் ஒருத்தி.

"ஆமாம், ஆமாம். ஜயந்தி பாஸ் செய்ததில் என்ன அதிசயமடி?... அவளைப் படிக்க உட்கார வைத்துவிட்டுச் சேகரன் ஸார் எல்லா



# திருத்தணிகை

## அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில்

## ஆடிக்கிருத்திகை தெப்பல் பெருவிழா

24-7-73 முதல் 26-7-73 முடிய

### 24-7-73 ஆடிக்கிருத்திகை

ஐந்தாவது படை வீடான தணிகையில் அமர்ந்துள்ள குன்றுதோறாடும் குமரனுக்குப் பல்லாயிரக்கணக்கானப் பக்தர்கள் மலர்க் காவடி செலுத்துதல் கண்கொள்ளாக்காட்சி. ஆயிரமாயிரம் மக்கள் முடி காணிக்கை செலுத்துதல் இத்தலத்தின் தனிச்சிறப்பு.

வரும் அன்பர்கட்கு இருக்க இடவசதி, மலைக்கோயிலுக்குச் செல்ல வாகன வசதி முதலியன உள்ளன. தணிகை முருகனுக்குத் தங்கக் கவசம் 4-7-1973 முதல் அணிவிக்கப் பெறுவதை அன்றுடம் ஆயிரமாயிரம் அன்பர்கள் கண்டுகளிக்கின்றனர்.

நினைத்ததை அளித்திடும் மனத்தினை உருக்கிடும் வழித்துணை வந்திடும் திருத்தணி முருகனின் இன்னருள் பெற்றிட வாரீர்! வாரீர்!!

திருக்கோயில் நிர்வாகிகள்
திருத்தணிகை.

---

**திருக்கோயில் நிலையங்களிலேயே முடி காணிக்கை, பிரார்த்தனை முடிப்புகள் ஆகியவை செலுத்த வேண்டுகிறோம்.**



லால்குடி கல்கி ஏஜண்ட் திரு S. K. வரதராஜன் அவர்கள் குமாரன் சிரஞ்சீவி V. ராஜு, M. Sc., F. G. M. S.,க்கும், சௌபாக்கியவதி R. சூடாவுக்கும் திருமணம் சமீபத்தில் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள் !

வற்றையும் தம் தலையில் போட்டுக்கொண்டு செய்திருப்பார். நம் வீட்டிலும் இருக்கிறார்களே.... ஒரு துரும்பைக்கூட எடுத்து இப்படி அப்படிப் போடாமல்...'' என்று அலுத்துக் கொண்டாள் மற்றவள்.

ஜயந்திக்கு நாக்கைப் பிடுங்கிக்கொள்ளலாம் போல வந்தது. அந்தச் சமயம் அறை வாசலில் புன்முறுவலுடன் நின்ற சேகரனைக் கண்டதும் மனம் குன்றிப் போனாள்.

எத்தனை ஆனந்தமாக ஆரம்பித்த தாம்பத்தியம் ஏன் இப்படி இவ்வளவு நரகமாகப் போயிற்று? ஏதோ ஆபீஸில் வேலை பார்ப்பவர்கள் திருமணம் செய்து கொள்ளக் கூடாதா? பெண்கள் ஆண்களுக்குச் சமம் என்று ஊரறிய முழங்கும் ஆண்கள், ஏன் அவள் ஒரு படி மேலே போனால் பொருமவேண்டும்?

ஜயந்தி ஒரு முடிவுக்கு வந்து விட்டாள். அவன் லீவு முடிந்து வேலைக்குப் போனதும் அவள் விடுமுறை கேட்கப் போகிறாள். அது நீண்டுகொண்டே போகும். சேகரனின் நிலையில் மாறுதல் தெரியா விட்டால் அந்த விடுமுறையின் முடிவில் அவள் வேலையிலிருந்து நின்று விடுவாள்.

சேகரின் இரண்டு மாத லீவு முடிந்து விட்டது.

''நாளைக்கு நீங்கள் 'டேட்டி'யில் சேர வேண்டும் இல்லையா?'' என்று கேட்டாள் ஜயந்தி.

''இன்றுடன் லீவு முடிகிறது. அவ்வளவுதான். நாளைக்கு ஆபீஸ் போக வேண்டும் என்பது கட்டாயம் இல்லை.''

''உங்களுக்கு லீவு ஏதும் பாக்கி இல்லை என்று ஞாபகம்...''

''நினைவுபடுத்தியதற்கு மிக்க நன்றி. வேலைக்குத் திரும்பிப் போக வேண்டுமா என்று நான் யோசிக்கும்போது, லீவு இருக்கிறதா இல்லையா என்பது அவசியமில்லாத ஒரு பிரச்னை இல்லையா?''

''என்ன சொல்கிறீர்கள்?... நீங்கள் வேலையை விட்டு விடப் போகிறீர்களா?'' என்று கேட்டாள் ஜயந்தி திகிலுடன்.

''வேலையை விட்டுவிட்டதாகவே வைத்துக்கொள். அப்புறம் நீ எனக்குச் சோறு போடமாட்டாயா? தெருவுக்கு விரட்டியடித்து விடுவாயா?''

அவள் ஒரு தீர்மானத்துடன் சொன்னாள்:

''வேலையை விட்டுவிடுவதானால் நீங்கள் விடவேண்டாம். நான் விட்டு விடுகிறேன்.''

''எதற்கு? வீட்டுக்காரனின் வயிற்றெரிச்சல் தாங்காமல் நான் வேலையிலிருந்து நின்று விட்டேன் என்று காலமெல்லாம் சொல்லிக் காட்டவா?''

''என்னை என்னதான் செய்யச் சொல்கிறீர்கள்? இப்படியும் போகவிட மாட்டீர்கள். அப்படியும் செய்ய அனுமதி கிடையாது. எனக்குப் பைத்தியமே பிடித்துவிடும் போல் இருக்கிறது...'' என்று அழமாட்டாத குறையாகச் சொன்னாள் ஜயந்தி.

''அப்படி யெல்லாம் நடக்கும்படி நான் விட்டுவிடுவேனா? அப்படியே நடந்தாலும் ஆபீஸ் செலவிலேயே மனைவிக்கு வைத்தியம் செய்யலாமே...! அதைப் பற்றிச் சட்டம் என்ன சொல்கிறது? ஞாபகம் இருக்கிறதா?



'' எங்கே உன் குட்டி ?''
''பிக் பாக்கெட் அடிச்சின்டு போயிட்டாங்க யாரோ !''

இல்லை, புத்தகத்தை எடுத்துத்தான் பார்க்க வேண்டுமா?'' என்று குத்தலாகக் கேட்டான் சேகரன்.

தன் தலையில் கைவைத்தபடி உட்கார்ந்து விட்டாள் ஜயந்தி. சேகரன் மேலே இருந்த மின் விசிறியைச் சுழல விட்டான்.

''என்னமா வியர்க்கிறது ஆபீஸருக்கு?... இந்தச் சமயத்தில் ஒரு லெமன் ஸ்ரெஷ் வாங்கி வர வேலைக்காரப் பையன் கூட இல்லையே!'' என்று அங்கலாய்த்தான் சேகரன்.

''அந்த விசிறியை நீங்கள் உடனே நிறுத்தப் போகிறீர்களா இல்லையா?'' என்று கோபத்துடன் கேட்டாள் ஜயந்தி.

''நிறுத்தா விட்டால் என்னை சஸ்பெண்ட் செய்து விடுவீர்களா மேடம்?'' என்று கேட்டான் சேகரன்.

ஜயந்தி பதில் பேசாமல் எழுந்து உள்ளே போனாள்.

மறு நாள் காலை.

அவள் ஆபீஸ் புறப்படுவதற்கான ஆயத்தம் ஏதும் செய்யவில்லை. அவனும் கிளம்பக் காணோம். முன் அறையில் சீட்டியடித்தபடி உட்கார்ந்திருந்தான்.

மணி எட்டரையாகி விட்டது. ''கடைசியாக என்ன முடிவு செய்திருக்கிறீர்கள்?'' என்று அவளாக வந்து கேட்டாள்.

''கடைசியாகச் செய்ய வேண்டிய முடிவுக்கு இப்போது என்ன அவசரம்? நான் இன்னும் திடமாகத்தான் இருக்கிறேன். எனக்கு என்ன இருந்தாலும் உனக்கும் உன் குழந்தைகளுக்கும்தான். உயில் எழுதுவது பற்றி பிறகு யோசிக்கலாமே....!''

''நீங்கள் வேடிக்கையாகப் பேசுவதாக நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். எனக்கு எத்தனை வேதனையாக இருக்கிறது தெரியுமா?... என் நிலைமை உங்களுக்குப் புரியவில்லையா?'' என்று ஆத்திரமையுடன் கேட்டாள் ஜயந்தி.

''எனக்குப் புரிகிறது. எப்போதோ புரிந்தது. அதனால்தான் நான் ஒரு முடிவுக்கு வந்தேன். நீயும் நானும் இதே ஆபீஸில் ஒன்றாக வேலை பார்ப்பது சிரமம். ஒன்று நீ அங்கே இருக்கக் கூடாது... இல்லை நானாவது வெளியேற வேண்டும்.''

''சில நாட்களாவது நான் ஹைதராபாத் அலுவலகத்துக்கு மாற்றல் கேட்டுக் கொள்ளட்டுமா?''

''மாற்றல் கேட்பதால் இந்தப் பிரச்னை தீர்ந்துவிடுமானால் உனக்கு முன்பே நான்



''இதோ இந்தச் சொட்டு மருந்தைக் கண்ணில் நாளிரு வேளை விட்டு வரவேண்டும்.''

''சாப்பாட்டுக்கு முந்தியா? அல்லது பிந்தியா?''

* * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * *

முந்தியிருப்பேன். அப்படிப் போவதானால் நம்மிடையே உள்ள இடைவெளிதான் அதிகமாகும்...''

''ஐய்யய்யோ!... அப்படியானால் மாற்றல் வேண்டாம்... நான்தான் நின்றுகொள்ளத் தயார் என்கிறேனே.''

''அது தவறு. இப்போது நம் குடும்பம் சிறியது. நாளையே அது பெரிதாகலாம். பொறுப்புக்கள் அதிகமாகலாம். அப்போது நீ தொடர்ந்து வேலையில் இருந்திருந்தால் இந்தச் சிரமம் வந்திருக்காது என்று உனக்கே தோன்றலாம். நான் அவசரப்பட்டுவிட்டதாக நீ நினைக்கலாம். நஷ்டம் குறைந்த அளவில் இருக்க வேண்டுமானால் நான் விலகுவதுதான் சரி'' என்றான் சேகரன் முடிவாக.

''அப்படியானால் நீங்கள் வேலையை விட்டு விடப் போகிறீர்கள்.''

''முடிவு எடுக்க இப்போது அவசரம் இல்லை...இன்னும் ஐந்து வருஷ காலத்துக்குச் சம்பளம் இல்லாத லீவு அரசு அனுமதிக்கிறது இல்லையா?''

''நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்? வேறு வேலை தேடப் போகிறீர்களா?''

''ஏன்? நீதான் ஒரு யோசனை சொல்லேன். இல்லை, இன்றைக்கு ஆபீஸிலிருந்து திரும்பும் போது அந்தக் கோவர்த்தனத்தைக் கேட்டுக் கொண்டு வாயேன்.''

வேறு வழியில்லை. வீம்பு பிடித்து உட்கார்ந்திருப்பதில் பயனில்லை. அவள் ஆபீஸ் போகத் தன்னைத் தயார் செய்து கொண்டாள். வீட்டுக்கு வெளியே வந்த போது ஒரு டாக்ஸி காத்திருந்தது. சேகரன் வெளியே புறப்படச் சித்தமாக இருந்தான்.

''கடைசியில் உங்கள் முடிவை மாற்றிக் கொண்டு விட்டீர்களா? எனக்கு எத்தனை ஆனந்தமாக இருக்கிறது. தெரியுமா?''என்று பூரித்துப் போனாள் ஜயந்தி. சேகரன் பதில் ஏதும் பேசவில்லை.

டாக்ஸி எழும்பூரைத் தாண்டி மவுண்ட் ரோடு பக்கம் வேகமாகச் சென்றது.

''எங்கே போகிறது?'' என்று பதற்றத்துடன் கேட்டாள் ஜயந்தி.

''பயப்படாதே! பத்து மணிக்கு உன்னை ஆபீஸில் சேர்த்து விடுகிறேன்!'' என்றான் சேகரன்.

மவுண்ட் ரோட்டில் ஒரு கடையின் முன்னால் டாக்ஸி நின்றது. சேகரனின் நண்பன் மோகனும் இன்னும் சிலரும் அங்கே கூடியிருந்தார்கள். கடையின் பெயர்ப் பலகை துணியால் மூடப்பட்டிருந்தது.

''ஒன்பது மணிவரை ராகுகாலம். அதனால் தான் பிறகு புறப்பட்டேன்!'' என்றான் சேகரன் மோகனிடம்.

மோகன் முன்வந்தான். ''இந்தக் கடையை உங்கள் தங்கக் கையால் திறந்து வைக்க வேண்டும் என்பது எங்கள் ஆசை, ஜயந்தி!''

எதுவுமே பேசாமல் ஜயந்தி மௌனமாகக் கடை வாசலில் கட்டப்பட்டிருந்த ரிப்பனைக் கத்தரித்தாள். பக்கத்தில் தொங்கிய பட்டுக் கயிற்றை அவள் இழுத்தவுடன் பெயர்ப் பலகையை மூடியிருந்த திரை இரண்டு பக்கமும் நகர்ந்தது. 'ஜயந்தி எலெக்ட்ரானிக்ஸ்' என்ற பெரிய பிளாஸ்டிக் எழுத்துக்கள் மின்னின.

ஜயந்தி வியப்புத் தாளாமல் சேகரனை ஏறிட்டுப் பார்த்தாள். அதுமட்டும் கடையாக இல்லா விட்டால் சேகரனின் தோள்களில் தன் முகத்தைப் புதைத்து ஆனந்தத்தில் விம்மியிருப்பாள்.

''வலதுகாலை எடுத்து உள்ளே வையுங்கள், மேடம்!'' என்று உபசரித்தான் சேகரன்.

''ஆபீசருக்குச் சேர் எடுத்துப் போடடா!'' என்று அதட்டினான் மோகன். வழங்கப்பட்ட குளிர்ந்த பானத்தைச் சுவைத்தபடியே ஜயந்தி சேகரனைக் கேட்டாள்:

''இப்படி ஒரு பிஸினஸ் ஆரம்பிக்கப் போகிறதாச் சொன்னால் நான் தடை சொல்லப் போறேனா? எதற்காக என்னை இந்த இரண்டு மாதங்கள் அழ வைத்தீர்களாம்?'' அவள் இமைக்கடைகளில் நீர் உருண்டது.

''அழாதே, டியர்!'' என்றான் சேகரன். ''எல்லாம் இந்த மோகனுடைய யோசனை. 'அந்தப் பாழும் பரீட்சையில் நான் பாஸ் செய்யாததால் உனக்கு என்மேல் ஒரு நல்ல அபிப்பிராயம் இருக்காது. பிஸினஸ் ஆரம்பிக்க நீ முட்டுக்கட்டைபோடுவாய்' என்றான். எனக்கும் நம்பிக்கை இல்லை. இரண்டு மாதங்கள் இங்கே இருந்து எல்லாம் பழகிக் கொண்டோம். நானும் மோகனும் கூட்டாக இந்தக் கடையை வாங்கி விட்டோம். முதல் அவனுடையது. உழைப்பு என்னுடையது. அதோடு கூட அதிகாரியான பின் நீ என்னை எப்படி நடத்துகிறாய் என்று பார்க்க ஓர் அல்ப ஆசை!'' என்றான் சேகரன் ஆதரவுடன்.

''அப்படியா?'' என்றாள் ஜயந்தி. அவள் குரல் உயர்ந்தது. கால் மேல் கால் போட்டுக் கொண்டு நிமிர்ந்து உட்கார்ந்தாள். தொண்டையைக் கனைத்துக் கொண்டாள்.

''உம்முடைய நடத்தை சென்ற இரண்டு மாதங்களாக எமக்கு இம்மியும் திருப்தி அளிக்கவில்லை... உம்முடைய சமாதானத்தை எம்மிடம் உடனே சேர்ப்பிக்க வேண்டும்... புரிகிறதா மேன்!'' என்று அதட்டினாள்.

''எஸ், மேடம்! இன்று இரவுக்குள் சமர்ப்பித்து விடுகிறேன். செய்த தவறுக்கு நீங்கள் என்ன தண்டனை வழங்கினாலும் ஏற்றுக்கொள்கிறேன்!'' என்றான் சேகரன், விஷமத்துடன் தன் கன்னங்களில் போட்டுக் கொண்டபடியே.

# 15. திருமலையின் தங்கை

நரசுவுக்கு ஒரே குழப்பம். தனக்காக அநுதாபப்படுவதா, தன் நண்பனுக்காக இரங்குவதா என்றே அவனுக்குத் தெரியவில்லை. மௌனமாகத் தலை குனிந்தபடி நடந்தான் அவன்.

''அட, இதைக் கேட்க மறந்துவிட்டேனே!'' என்று அப்போதுதான் எதையோ நினைவுகூர்ந்தவன் போல் அவசரமாக நரசுவைப் பிடித்து நிறுத்திய திருமலை, ''ஆமாம்; நீ எதற்கு இங்கே வந்தே?'' எனக் கேட்டான்.

தான் வந்திருக்கும் அதே இண்டர்வியூவுக்குத்தான் தன் நண்பனும் வந்திருக்கிறான் என்பதை அறிந்த அக்கணமே, அதுபற்றி அவன் தன்னிடம் கேட்டால் என்ன சொல்ல வேண்டும் என்பதற்கு ஒரு முடிவு எடுத்து வைத்திருந்தான் நரசு. இப்போது கொஞ்சமும் தயங்காமல், ''நானா?... நான் சும்மா ஊரைச் சுற்றிப் பார்க்கக் கிளம்பினேன். இந்தப் பக்கம் பஸ்ஸில் போய்க்கிட்டு இருக்கிறப்போ இங்கே ஏதோ ஜனக் கூட்டமும் போலீஸ் லாரிகளும் தென்படவே பார்த்துவிட்டுப் போகலாம்னு இறங்கி வந்தேன். அப்படி வந்ததால்தான், 'நினையாத முன் வந்து நிற்பினும் நிற்கும்.... எனையாளும் ஈசன் செயல்' என்கிற பாட்டை இப்ப என் மனசுக்குள்ளே பாட வேண்டியவனாகி விட்டிருக்கிறேன்'' என்று கூறிக் கண் சிமிட்டி நகைத்தான்.

இருவரும் மெயின் சாலையிலிருந்த ஒரு ஹோட்டலுக்குப் போய்க் காப்பி சாப்பிட உட்கார்ந்தனர்.

இவ்வளவு நேரம் உற்சாகமும் மகிழ்ச்சியுமாய்க் காணப்பட்ட திருமலையின் முகத்தில் இப்போது திடீரென்று கவலை மேகங்கள் கவிந்தன. அடிக்கடி தன் கைக்கடிகாரத்தைப் பார்த்துக்கொண்ட அவன் உள்ளூறப் பரபரப்படைபவன் போலவும் தோன்றினான்.

இதைக் கண்டும் காணாதவன் மாதிரி காப்பியை ஆற்றிப் பருகிக் கொண்டிருந்த நரசு, ''என் திருமலை! இந்தக் கம்பெனியில் வேலைநிறுத்தம் நடக்குதுன்னு நேத்திக்கே பேப்பரில் படித்ததாகச் சொன்னாயே, அது தெரிஞ்சிருந்தும் இன்னிக்கு எதற்கு வந்தே? கதவடைப்புச் செய்திருக்கும்போது வேலைக்குப் புதுசா ஆள் எடுக்க மாட்டாங்கங்கிறதுகூடவா உனக்குத் தெரியாது?'' என்று கேலிக் குரலில் கேட்டான்.

''அது தெரியும், நரசு! தெரிஞ்சுதான் வந்தேன். கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி நீ சொன்னாயே, 'நினையாத முன் வந்து நிற்பினும் நிற்கும்.... எனையாளும் ஈசன் செயல்'னு, அது மாதிரி எதுனாச்சும் என் விஷயத்தில் அதிசயம் நடக்காதான்னு ஒரு நப்பாசை. 'அப்படி ஒண்ணும் ஈஸியா உனக்கு நான் எதையும் செய்துவிட மாட்டேன்'னு அந்த ஈசனே இப்பக் கையை விரிச்சுட்டான்'' என்று கூறிச்





சிரித்தான் திருமலை. சிரிக்க வேண்டும் என்பதற்காகவே தனக்குள் தானே ஓர் உற்சாகத்தைக் கிளறி விட்டுக் கொண்டு சிரிப்பது போல் இருந்தது அவனுடைய இந்தச் சிரிப்பு.

நரசு சென்னையில் ஒரு ஹாஸ்டலில் தங்கிப் பட்டப் படிப்பைத் தொடங்கின முதலாண்டின்போதே இந்தத் திருமலை அவனுக்கு நண்பனானான். விடுதியில் அவன் தங்கிப் படித்தவனல்ல; தன் வீட்டிலிருந்தே கல்லூரிக்கு வந்து போவான். ஆயினும் ஒரே வகுப்பில், ஒரே பிரிவில் இருவரும் இருந்ததால் வெகு விரைவிலேயே நெருங்கிய நண்பர்களாயினர். படிப்பில் இருவருமே கெட்டிக்காரர்கள். மற்றக் குண விசேஷங்களிலும், விருப்பு வெறுப்புக்களிலும் கூட இருவருக்கும் மிகுந்த ஒற்றுமை இருந்தது. அதனால் அவர்களது நட்பு மேலும் உறுதியாயிற்று. சினிமா, நாடகம், கடற்கரை, பொதுக் கூட்டம், ஹோட்டல், நூலகம் என்று எங்கே போவதானாலும் இருவரும் சேர்ந்தே போவார்கள். திருமலை இவற்றுக்கெல்லாம் தன் கைப்பணத்தை அதிகம் செலவிட மாட்டான்; அப்படிச் செலவிட அவனிடம் பணமும் இருக்காது. பெரும் பகுதி செலவுகளை நரசு தான் ஏற்பான். இதிலிருந்து அப்போதே நரசுவுக்குத் திருமலையின் பொருளாதார நிலையை ஓரளவு அறிய முடிந்தது. எனினும் அவனுடைய குடும்ப விஷயங்கள் ஒன்றும் தெரியாது. அவனும் அவை பற்றி அவனிடம் எதுவும் சொல்வதில்லை.

அதையெல்லாம் இப்போது நினைவு படுத்திக் கொண்ட நரசு, இந்தக் கம்பெனியில் திருமலை வேலை தேடி எவ்வளவு ஆவலோடு வந்திருக்கிறான் என்பதை அவனது பேச்சிலிருந்து புரிந்து கொண்டதையும் சேர்த்து ஒப்பிட்டுப் பார்த்தான். கடந்த ஓராண்டாக அவன் வேலையின்றிப் படும் துயரையும், அதிலிருந்து மீள இந்த வேலையாவது தனக்குக் கிடைக்காதா என்று ஏங்கும் ஏக்கத்தையும் நன்கு உணர்ந்துகொண்டான். ஆயினும் அவன் வாயிலாகவே அவனுடைய குடும்ப நிலை பற்றி ஓரளவாவது அறிந்து கொள்ள வேண்டுமென்ற உள்ளார்ந்த துடிப்புடன் ''ஏன் திருமலை! இந்த ஒரு வருஷமாக வேலை தேடி அலையறதாகச் சொல்றயே, இது 'உத்தியோகம் புருஷ லட்சணம்' என்பதற்காக அலையற அலைச்சலா?... இல்லே...'' என்று மென்று விழுங்கிக் கேட்டான்.

''நல்லா கேட்டயே ஒரு கேள்வி!''—குபீரெனச் சிரித்தான் திருமலை. பிறகு அவசரமாகத் தன் கைக்கடிகாரத்தில் மணி பார்த்துவிட்டு, ''சரி, வா! வெளியே போய்ப் பேசவோம்'' என்று கூறியவாறு எழுந்தான்.

ஹோட்டல் பில்லை நரசு கொடுக்க, இருவரும் பஸ் நிலையத்தில் வந்து நின்று கொண்டனர்.

''என்ன கேட்டே? உத்தியோகம் புருஷ லட்சணம் என்பதற்காக ஓர் உத்

நியோகம் வேணும்னு அலைகிற ஆளாகவா என்னைப் பார்த்தால் உனக்குத் தெரியுது?'' என்று குறுநகையுடன் வினவினான் திருமலை. சற்று நேரம் மௌனமா யிருந்து விட்டு, ''இது உன் தப்பில்லை! ஏன்னா, என் குடும்ப நிலவரம் உனக்கு ஒண்ணும் தெரியாது, இல்லையா? நானும் சொன்னதில்லை!'' என்று தனக்குத் தானே சமாதானம் கூறிக் கொள்கிறவனைப் போல் கரகரத்தான். பிறகு அவனே தொடர்ந்து, ''என்னடா இது, இவன் கிட்ட வந்து வசமாச் சிக்கிக் கொண்டோமே, நேரம் வேளை பார்க்காமல் தன் சுய புராணத்தை அவிழ்த்து உதறி நம் மனசைக் கலக்கிக் குழப்புறானே என்று நீ நினைக்காமல் இருந்தால் என்னைப் பற்றிச் சுருக்கமாச் சொல்றேன், கேளு!'' என்றான் திருமலை.

நரசு அவன் முதுகைத் தட்டி, ''அப்பனே! உன் பழைய குறும்புத்தனம் இன்னமும் உன்னை விட்டுப் போகவில்லையே!'' என்று அவனை உற்சாகப்படுத்தும் வகையில் கூறிச் சிரித்தான்.

''ஆமாம்; அது ஒண்ணுதான் அன்றைக்கும் இன்றைக்கும் என்கிட்ட இருக்கிற ஒரே சரக்கு!'' என்று திருமலையும் நகைத்துவிட்டு மேலும் சொன்



ளுன்: ''எனக்கு அப்பா இல்லை. நான் சின்னப் பையனாக இருந்தபோதே காலமாயிட்டார். என்கூடப் பிறந்த ஒரு தங்கை உண்டு. அவள் என் மாமா ஒருத்தரின் ஆதரவில் வளர்ந்து...ம்... என்ன சொன்னேன்?... ஆமாம்; என் அம்மாதான் என்னை வளர்த்தாள்; ரொம்பக் கஷ்டப்பட்டுப் படிக்க வைத்தாள். குழந்தைகள் பராமரிப்பு நிலையம் ஒண்ணிலே ஆயா வேலை. அறுபது ரூபாய் சம்பளம். இதிலேதான் போன வருஷம்வரை எங்கள் 'வண்டி' ஓடியது. நானும் படிச்சேன். படிச்சுப் பட்டம் வாங்கின அதே மாசம் என் அம்மாவை அந்த வேலையிலிருந்து நிறுத்திவிட்டாங்க. வயசாயிட்டது காரணம். 'பரவாயில்லை, பையன் படிச்சு முடிச்சுட்டான், உத்தியோகம் பார்த்து என்னை உட்கார வைச்சுச் சோறு போடுவான்னு அம்மா நினைச்சாள். நினைச்சது நடக்கலே. அதாவது எனக்கு வேலை கிடைக்கலே. பட்டத்தைத் தூக்கித் தலைமேலே சுமந்துக்கிட்டு சுமார் ஐம்பது கம்பெனிகள், நாற்பது சர்க்கார் ஆபீசுகள் — இத்தனை படிகளிலும் ஏறி இறங்கிட்டேன். ஒண்ணிலும் குதிர்ப்படலே. சரி; வயிற்றுப் பிழைப்புக்கு?.. தினமும் சைனா பஜாரில் இருக்கிற ஏழெட்டுப் பெட்டிக் கடைகளுக்குச் சாயந்திர வேளையில் போவேன். அவர்கள் அன்றாட வரவு — செலவுகளைச் சின்னச் சின்னச் சீட்டுக்களில் குறித்துக் குப்பை போல் கல்லாப் பெட்டியில் போட்டு வைச்சிருப்பாங்க. அதுகளைச் சரிப்படுத்திக் கணக்குப் பேரேட்டிலே ஏற்றி எழுதிக் கொடுத்துவிடவேண்டியது. ஒவ்வொரு கடையிலும் இருபது நிமிஷ வேலை. கடைக்கு எட்டணா அல்லது பத்தணா கூலி கிடைக்கும். நம்ம சுதந்திர இந்தியாவில் ஒரு பி. காம்., பட்டதாரி சாதித்துக் கொண்டிருக்கிற மகத்தான சாதனை இது!... ஆமாம்; இந்த வரும்படியிலே தான் இப்போதைக்கு எங்கள் குடும்ப வண்டி ஓடிக்கிட்டு இருக்குது!.... போதுமா?... என்னைப் பற்றித் தெரிஞ்சுக்கணும்னு கேட்டயே, இந்த அளவு விவரம் போதுமா? இன்னும் சொல்லட்டுமா?''

இவ்வளவு நேரம் ஏதோ ஒரு பெரிய கொதிகலனுக்குள் புகுந்து வெளியே வந்தவன் மாதிரி வேர்த்து விறுவிறுத்து நின்றிருந்தான் நரசு.

பரபரப்புடன் தன் கைக் கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டான் திருமலை. ''என்ன, இந்த பஸ் இன்னும் வந்து தொலைய மாட்டேன் என்கிறதே!'' என்று அலுப்புடன் முணுமுணுத்தான். பிறகு, ''இன்னும் நீ வேறு எங்கேயாவது போக வேண்டியிருக்குதா?'' என்று கேட்டான்.

''இல்லை; நேரே வீட்டுக்குத்தான்.''

ஒரு பஸ் வந்தது. இருவரும் அதில் ஏறிக் கொண்டனர். தன் கையில் சர்டிஃபிகேட்டுகளும், இன்டர்வியூ கார்டும் அடங்கிய ஃபைல் இருப்பதை அவன் பார்த்துவிட்டு, 'அது என்ன?' என்று கேட்டுவிடுவானோ எனப் பயந்தவனாய் அதனைக் கக்கத்திலேயே இடுக்கி வைத்துக் கொண்டிருந்தான் நரசு. நல்லவேளையாகத் திருமலையின் பார்வை அந்த ஃபைலின்மீது விழவில்லை. அவனுடைய சிந்தனையும் கவனமும் வேறு எதிலோ, எங்கோ ஆழ்ந்துபோய் இருந்ததால் பஸ்ஸில் அவன் ஒன்றும் பேசவும் இல்லை. மவுண்ட்ரோடு ரவுண்ட்டாணாவில் அவர்கள் இறங்கிக்கொண்டார்கள்.

நரசுவின் எதிரே வந்து நின்று அவனது தோள்களில் தன் இரண்டு கைகளையும் போட்டுக் கொண்டு அவன் முகத்தையே புன்முறுவலுடன் பார்த்தான் திருமலை. ''இன்னிக்கு முழுக்க உன்னோடு இருந்து ஊர்க்கதை, உலகத்துக் கதையெல்லாம் பேசிப் பொழுதைப் போக்கணும்னு நான் ரொம்ப ஆசைப்படறேன் நரசு! ஆனால்... அதுக்கு நான் கொடுத்து வைக்கலே. ஒரு பெரிய சங்கடத்தில் சிக்கிக்கிட்டு என்ன செய்யறதுன்னு தெரியாமல் விழிச்சுக்கிட்டு இருக்கிறேன்'' என்றான் வருத்தம் தோய்ந்த குரலில்.

''அதனாலென்ன, கவலைப் படாதே! நான் இன்னும் சில தினங்கள் — ஏன், சில மாதங்கள் கூட — இங்கே இந்த ஊரில் தங்கியிருந்தாலும் இருப்பேன். உன் வீட்டு விலாசத்தைக் கொடு. முடிந்தால் நாளைக்கே வந்து உன்னைச் சந்திக்கிறேன்'' என்று ஆதரவாகப் பதிலிறுத்த நரசு, மேலும் சொல்ல, அல்லது கேட்க வாயெடுத்தபோது

திருமலை ஒரு காகிதத் துண்டில் பரபரவெனத் தன் விலாசத்தை எழுதிக் கொடுத்தான். அதை வாங்கி ஜேபியில் திணித்துக் கொண்டு, சற்று நிதானித்துவிட்டு, ''ஆமாம்; என்னமோ சங்கடத்தில் அகப்பட்டுக்கொண்டு விழிப்பதாகச் சொன்னாயே, அது என்னன்னு நான் தெரிஞ்சுக்கலாமா?'' என்று வெகு நாசூக்காகக் கேட்டான்.

திருமலையின் முகம் இடீரெனக் கறுத்துச் சிறுத்தது. துக்கத்தால் கண்களில் செவ்வரி படர்ந்தது. தன் உணர்ச்சிகளை அடக்கிக் கொள்வதற்காகச் சில விநாடிகள் மௌனமாயிருந்த அவன், பார்வையை வேறு பக்கம் திருப்பியவாறு அடைத்த குரலில் சொன்னான்: ''அந்த பஸ் நிலையத்திலே நிற்கிறபோது, 'எனக்கு ஒரு தங்கை இருக்கிறாள், என் மாமாவின் ஆதரவில் அவள் வளர்ந்து வருகிறாள்' அப்படீன்னு உன்கிட்டச் சொன்னேன் இல்லையா? நேத்திக்கு அந்த மாமாவிடமிருந்து எங்களுக்கு ஒரு கடிதம் வந்தது. என் தங்கை ஏதோ கோபத்தில் அவருடைய வீட்டிலிருந்து யாரிடமும் எதுவும் சொல்லிக் கொள்ளாமல் இரவு நேரத்திலே புறப்பட்டுப் போய்விட்டாள் என்றும், எங்கெங்கோ தேடிப் பார்த்தும் கிடைக்கவில்லையாதலால், அவள் மெட்ராசுக்குத்தான் வந்திருப்பாள் என்றும், அப்படி வந்து சேர்ந்திருந்தால் உடனே தகவல் தெரிவிக்கும்படியும் அந்தக் கடிதாசியில் அவர் எழுதியிருந்தார். ஆனால் இன்னிக்குக் காலை வரை அவள் எங்களிடம் வந்து சேரலே. இதில் ஒரு பெரிய இக்கட்டு என்னன்னா, அவள் இதற்கு முன் ஒரு முறைகூட இந்தப் பட்டணத்துக்கு வந்ததில்லை. அம்மாதான் எப்பவாவது நினைச்சுக்கிட்டா ஊருக்குப் போய் அவளைப் பார்த்துட்டு வருவாங்க. நானே கூட ரெண்டு மூணு தடவைதான் பார்த்திருக்கிறேன். இப்படிப்பட்டவள் எங்க வீட்டு விலாசத்தைத் தெரிஞ்சுக்கிட்டுப் புறப்பட்டிருந்தாலும், இங்கே வந்து இவ்வளவு பெரிய ஊரில் நாங்கள் இருக்கிற இடத்தைக் கண்டுபிடிச்சுடறது அத்தனை சுலபமா என்ன? வழி தெரியாமல் எங்கே போனாளோ, என்ன ஆனாளோ? மோசத்திலும் படுமோசமான ஊராச்சே இது!... கடிதம் வந்ததுமே என் அம்மா ஒரு பக்கம், நான் ஒரு பக்கமாகப் போய் நேற்றுப் பகல்—இரவு ரெண்டு வேளையும் அலைஞ்சு திரிஞ்சு தேடிப் பார்த்தோம். போலீஸ் ஸ்டேஷன்களிலும் விவர மனுவை எழுதிக் கொடுத்தோம். இந்த நிமிஷம் வரையில் ஒரு தகவலும் கிடைக்கலே.''



''நல்லெண்ணெய் என்ன விலை?''

''8 - 50.''

''கோடிக் கடையில் 7-50க்குக் கொடுக்கிறாங்களாமே!''

''அங்கேயே போய் வாங்கிக் கொள்ளுங்களேன்!''

''அங்கு இப்ப ஸ்டாக் இல்லையாம்!''

''அப்ப எங்களிடமும் ஸ்டாக் இல்லாதபோது வாருங்கள். நாங்களும் 7-50க்குத் தர்றோம்!''

---

''அது சரி, திருமலை! உன் மாமா இருக்கிற ஊர் எது?'' என்று தன்னை மீறிக் கிளர்ந்த ஒரு திகிலுடன் தணிந்த குரலில் கேட்டான் நரசு.

''ஓ!... அதைச் சொல்லவில்லையா? உன்னோட ஊர்தான் நரசு! மாயவரம்தான். கொறநாட்டில் அவருக்கு வீடு.''

''உன் தங்கையின் பேரு?''

''கண்ணம்மா!'' என்று சொன்ன திருமலை, இனியும் தான் பேசிக்கொண்டிருந்து நேரத்தை வீணாக்க விரும்பாதவன்போல், ''என்னை மன்னிச்சுடு நரசு! என் அம்மா விடியற்காலை மூணு மணிக்கே மகளைத் தேடிப் பார்க்கப் போனாங்க. நானும் காலை ஒன்பது மணி வரையில் ஊரெல்லாம் அலைஞ்சேன். இன்னிக்குப் பார்த்து இந்த இண்டர்வியூவும் இருந்ததாலே அதைத் தட்டிக்கழிச்சுட மனமில்லாமல் அந்தக் கம்பெனிக்கு ஓடினேன். எனக்கு முன்னால் என் தரித்திரம் ஓடிப்போய் அங்கே நின்னுட்டது; நிற்கட்டும்!... இப்ப நேரே என் வீட்டுக்குப் போய்த் தங்கை வந்துட்டாளான்னு பார்த்துட்டு, வரலேன்னா மறுபடியும் அவளைத் தேடிப் பார்க்கக் கிளம்பணும். அதற்குத்தான் இப்படி அவசரப்படறேன். தவறாக ஒண்ணும் நினைச்சுடாதே! நாளைக்கு நாம் அவசியம் சந்திப்போம்'' என்றவாறு அங்கிருந்த பஸ் நிலையத்தை நோக்கிச் செல்லத் திரும்பினான். பிறகு ஏதோ நினைத்துக் கொண்டவ



டாக்டர்: இப்பத்தானே இந்த ஆளுக்கு 'ஷாக் ட்ரீட்மெண்ட்' கொடுத்து அனுப்பினேன். அதுக்குள்ளே என்ன ஆச்சு?

டாக்டர் கிளார்க்: எவ்வளவு பில் என்று கேட்டார். சொன்னேன். அவ்வளவுதான். ஷாக் அடிச்ச மாதிரி விழுந்துட்டார்.

---

ளுய்ச் சட்டென்று நின்று, ''அடேடே, இதைக் கேட்க மறந்து விட்டேனே!'' என்றான்.

பிரமை பிடித்தவன்போல் அப்படியே விக்கித்து நின்ற நரசு அவனை ஏறிட்டுப் பார்த்தான்.

''ஆமாம், நரசு! நீ தங்கியிருக்கிற வீட்டு விலாசத்தை எனக்குச் சொல்லவில்லையே! ஒருவேளை என்னைப் பார்க்க வர உனக்கு அவகாசம் கிடைக்கலேன்னாலும் நானாவது உன்னைத் தேடி வரலாம் இல்லையா, அதற்குத்தான் கேட்கிறேன்.''

நரசு இதைச் செவிமடுக்காதவன் போல், ''ஏன் திருமலை, இப்ப நானும் உனக்கு உதவியாக உன்னோடு வருகிறேனே?'' என்று ஒருவித ஆவலும் படபடப்புமாக வினவினான்.

ஆச்சரியத்துடன் அவனைக் கூர்ந்து நோக்கிய திருமலை மெல்லச் சிரித்துக் கொண்டான். ''ரொம்ப நன்றி நரசு! ஆனால் உனக்கு அவ்வளவு சிரமம் கொடுக்க எனக்கு விருப்பமில்லை'' என்றவன் மீண்டும் தழுதழுத்த குரலில் ''இப்படி நான் சொல்றதை நீ தவறாகப் புரிஞ்சுக்க மாட்டேன்னு நம்பறேன்'' என்றான்.

இதற்கு மேல் அவனிடம் வற்புறுத்திக் கேட்கத் துணிவு இல்லாமல் தயங்கினான் நரசு. ''சரி; நீ முதலில் என்ன கேட்டே?... ஓ.... நான் தங்கியிருக்கிற வீட்டு விலாசமா?....'' என்று இழுத்து நிறுத்தி விட்டுச் சற்று நிதானித்து, ''வேதமூர்த்தி என்கிறவரைத் தெரியுமா உனக்கு?... பழைய தேசபக்தர்! அநேகமாய்த் தெரிந்திருக்கும்...'' என்றான் புன்னகையுடன்.

இதைக் கேட்டு அதிர்ச்சியும் வியப்பும் அடைந்தவன் போல் ஓரடி பின்னால் நகர்ந்தான் திருமலை, ''யார்?... வேதமூர்த்தியா...?'' என்று கேட்டுவிட்டு உடனே, அவர் குடியிருக்கும் பகுதியையும், தெருப் பெயரையும் சரியாகச் சொல்லி, ''இந்த விலாசத்தில் இருப்பவரா?'' என்று தன்னை மீறிய ஒரு பதற்றத்துடன் வினவினான்.

''அவரேதான்! அவரை உனக்கு அறிமுகம் உண்டா திருமலை?''

''ஐயோடா! அவ்வளவு பெரிய மனிதரை நான் எப்படி அறிமுகப்படுத்திக் கொள்ள முடியும்?''

''பின்னே, அவருடைய வீட்டு விலாசத்தைச் சரியாகச் சொல்கிறாயே!''

திருமலைக்கு நரசுவின் மேல் ஏதோ சந்தேகம் தட்டிவிட்டாற்போல் தோன்றியது. அப்படி அவனை ஒரு தினுசாகப் பார்த்துக் கொண்டே, ''என்னப்பா விளையாடறதுக்கும் கேலி செய்யறதுக்கும் இதுதானா நேரம்?'' என்றான் வருத்தம் தோய்ந்த குரலில்.

''என்னது! கேலி செய்யறேனா? விளையாடறேனா?''

''சும்மா நடிக்காதே, பிரதர்!''

''விஷயத்தைச் சொல் திருமலை?''

''என்னத்தைச் சொல்றதாம்?...... இப்ப நாம் பார்த்துவிட்டு வந்தோமே 'பைப் பாரத்' கம்பெனி, அதன் டைரக்டர்களில் அவரும் ஒருத்தர் என்பது உனக்குத் தெரியாதா? நேத்திக்கு அவரோட வீட்டண்டைதான் ஊர்வலமாக வந்த தொழிலாளர்கள் கலாட்டாபண்ணினது! அவருடைய வீட்டிலே வந்து தங்கியிருந்துக்கிட்டு, அவர் பாகஸ்தரா யிருக்கிற கம்பெனியையும் சுற்றிப் பார்க்க வந்துட்டு, இவ்வளவு நேரம் என்கிட்ட ஒண்ணுமே தெரியாத மாதிரி....? சரி, சரி; இப்ப எனக்குப் பேசிக்கிட்டிருக்க நேரமில்லை. நாளைக்குச் சந்திப்போம். பை பை!'' என்று படபடவெனச் சொல்லிக் கொண்டே அவசரமாக ஓடிப் போய் ஒரு பஸ்ஸில் தாவி ஏறினான் திருமலை. பஸ் கிளம்பிச் சென்றது.

சிந்திக்கும் திறனெல்லாம் மரத்துப்போன நிலையில் அப்படியே சிலையாகச் சமைந்து நின்று கொண்டிருந்த நரசுவுக்குச் சற்று நேரம் கழித்துத்தான் ஒரு விஷயம் மின்னலென மூளையில் கீறலிட்டது. ஆம்; நேற்றிரவு வேதமூர்த்தியின் மகள், மனோகரி தன் வீட்டண்டை ஏதோ அநுசிதமான சம்பவம் ஒன்று நடைபெற்றுப் போலீஸ் வந்து பாதுகாப்பு அளித்ததாகச் சொன்னதை இப்போது அவன் நினைத்துக் கொண்டான்.

(தொடரும்)

# உண்டு களித்திடுவீர் மீண்டும்!

# ஸான்ஸைம்

அவற்றை விரைவாக ஜீரணிக்கச் செய்கிறது...

ஸான்ஸைம் சிறப்பான
3 வழிகளில் செயல் புரிகிறது

- ஸான்ஸைம் எல்லாவித உணவுப் பொருட்களையும் ஜீரணித்து, சத்துக்களை உட்கிரகிப்பதோடு பசியையும் தூண்டுகிறது.
- ஸான்ஸைமில் உள்ள விசேஷ நுரை எதிர்ப்பு சக்தி வாயுவையும் வலியையும் துரிதமாக போக்குகிறது.
- ஸான்ஸைம் கொடியில் அமிலங்களைச் சமனப்படுத்துகிறது.

ஜீரண பலமே பூரண நலமாகும்

இன்றே ஸான்ஸைம் வாங்குவீர்

4 மாத்திரைகள் அடங்கிய எங்கள்
புதிய பாக்கெட் வாங்குவீர்...
விலை 49 காசுகள் மட்டுமே!








யூனி-ஸாங்க்யோ லிமிடெட்.
பம்பாய்-26.

PRATIBHA 1012-10-TAM

தமிழ்நாட்டிற்கு விநியோகஸ்தர்கள்:

M/s கணபதி & கோ, 108/104, லிங்கி செட்டித் தெரு, த.பெ. எ. 1986, சென்னை-1

---

கடும் ஜலதோஷம்
உடனடியாக குணமாகிறது!






# அமிர்தாஞ்சனம்

AH/7570

தலைவலி, ஜலதோஷம் மற்றும் வலிகளுக்கு நம்பகமான நிவாரணி.

அமிர்தாஞ்சனம் ஜலதோஷம், உடல்வலி, தசைவலி, தலைவலி களுக்கு இவற்றிலிருந்து உடனடியாக குணமளிக்கிறது. அமிர்தாஞ்சனம் தடவியதும் வலி மறைகிறது. பாட்டில்கள், சிக்கனமான ஜாடிகள், மற்றும் மலிவு விலை டப்பாக்களிலும் கிடைக்கிறது.

அமிர்தாஞ்சனம் — பத்து மருந்து பொருள்கள் ஒருங்கே சேர்ந்தது.

அமிர்தாஞ்சன் லிமிடெட்

அக்கம் பக்கத்தில் இருந்தவர்கள் சாடா பேர்களும் அந்த ஒற்றைத் தனிக் குடிசையின் திட்டி வாசலில் கூடிவிட்டார்கள்.

இழவி மங்காத்தா கரணை தப்பிய நிலையில் அடித்துப் போட்ட மாதிரி கிடந்தாள்.

வைத்தியர் நெடுமூச்சைப் பிரித்தபடி, பொடி மட்டையைப் பிரித்தார். "என்னமோ எல்லாப் பாரத்தையும் ஆத்தா அங்காளம்மா மேலே தூக்கிப் போட்டுப் புட்டு என்னோட கடமையைச் செய்யறேன், அம்பலக்காரரே!" என்றார்.

"நல்லதுங்க!"

பரிதாபம்! — இழவி மங்காத்தா மறுபடியும் அரற்றத் தொடங்கி விட்டாள். "நான் பெத்த மகளே! இனி எப்பிறப்புக்கு உன்னைக் கண்ணுலே பார்க்கப் போறேன் நான்? ஐயையோ, பாழுந் தெய்வமே! நான் என்ன பாவம் செஞ்சேன்? எனக்கு ஏதுக்கு இம்மாங்கொத்த நிலைச் சோதனை வெல்லாம்? என் வயிற்றிலே பிறந்த மகள் மூலமா தடம் மறிக்க வேணுமோ?..." என்று புலம்பினாள். கண்ணீரின் சரந்துளிகள் அந்த வெறுங் கழுத்துக்கு மாலைச் சரம் தொடுத்தன போலும்!

ஆமாம்; காலம் ஒரு செப்பிடு வித்தைக்காரன் தான்.

இந்தியதியின் நாணயமான உண்மைக்கு ஓர் உயிர்ச் சாட்சியமாக அமைந்தவள் மங்காத்தா. "இந்தப் பனங்குளம் ஊர் நாட்டிலே மறக்குலச் சமுதாய ஒழுங்குக்குக் கட்டுப்பட்டு, மானம் மரியாதைக்குக் கட்டுப்பட்டு, ரோசத்துக்கு அடிபணிஞ்சு வாழவும் வாழ்ந்து காட்டவும் வேணும் என்கிறதுதான் என்னோட வைராக்கியமாக்கும்!" — இது, அவளுடைய வாழ்க்கைக்கு அவளே விதித்துக் கொண்ட வைராக்கியக் கனவாகவும் அமைந்திருந்தது. அந்த லட்சியக் கனவின் 'கெலிப்பு'க்கு முதல் நிரூபணமாக அமைந்தவன் — அல்லது அமைத்துக் கொண்டவன் அவள் கைத்தலம் பற்றிய சாமியப்ப அம்பலம். தன்னுடைய நெஞ்சத்தின் நேசக் கனவைத் துண்டு முறித்துப் போட்டுவிட்டு, தன் பெற்றோர்கள் இட்ட ஆணையைச் சிரமேல் தாங்கி அவள் இந்தச் சாமியப்ப அம்பலத்தைக் கைப்பிடி நாயகனாக வரித்துக் கொண்டாள். 'என்னைப் பெற்று வளர்த்து ஆளாக்கிய என்னோட அப்பன் ஆத்தாளோட மானம் மரியாதையைக் காப்பாற்ற வேண்டித்தான், அவங்க புள்ளி காட்டிச் சுட்டின இந்த மச்சானைக் கண்ணாலம் கட்டிக்கிட்டேன். அதுவே என்னோட நன்றிக் கடனாக்கும்!' என்றாள்.

ஆனால்...?



அல்லிக்கு அந்தப் பாசத்தின் தர்மம் ஏன் விளங்கவில்லை?

மங்காத்தா ஆண் பிள்ளைக்குத் தவம் இருந்தாள். ஆனால் பிறந்தவளோ இந்த அல்லி தான். என்றாலும் மனம் சடைகொண்டு ஒடிந்து விடவில்லை. அல்லியைக் கறிவேப்பிலைக் கொத்தாக மதித்தும் மதிப்புக் கொடுத்தும், கண்ணிலே வைத்து இமைகளால் காத்து வளர்த்தாள். ஆனால் அல்லியோ, வளர்ப்பின் கட்டுமானத்தைத் தாண்டி, ஆணுக்கு ஆணாகவும், பெண்ணுக்குப் பெண்ணாகவும் உருப்பெறலானாள். அல்லி, அல்லி ராணியாகவே பொலிந்தாள்.

காலம் ஒரு புள்ளிமான்.

அல்லியும் ஒரு புள்ளி மான் ஆனாள்.

சமைந்தாள் அல்லி. அப்போது தான் சோதனை நிகழ்ந்தது. சோதனை அவளுக்கு மட்டும் வாய்க்கவில்லை; அவளைப்பெற்ற மங்காத்தாளுக்கு — கொண்டவனை யமதர்மனுக்கு அள்ளிக் கொடுத்து விட்டுத் தனித்த மங்காத்தாள் இழவிக்கும் சோதனை வாய்த்தது.

காரணம் இதுவே:

அல்லியின் மனக் கோயிலில் கொலுவீற்றிருந்தவன் இளவட்டம் முத்தையன். பசை தப்பின விடலையென்றாலும், ஆள் வாட்ட சாட்டமானவன். பட்டணத்தில் 'கொண்டு வித்த' செட்டியார் வீட்டுக் காப்பித் தூள் கம்பெனியில் அலுவல் பார்த்தான். நாலும் விளங்கினவன். நல்லவன். போதாதா? — "மச்சான்! கட்டிக்கிட்டா உங்களைத்தான் நான் கண்ணாலம் கட்டிக்கிடுவேன். என் மட்டுக்கும் நீங்க எனக்கு அர்ச்சுனன் மகாராசாதான்! உங்களுக்கு மூத்தாளை விரிக்கிற

பாக்கியம் எனக்குக் கிட்டலியானு, கன்னி கழியாக் குட்டியாகவே காலமெல்லாம் கழிப் பேன். கன்னித்தாய் மாரியாத்தாள் பேரிலே ஆணை இதுங்க, ஆசை மச்சானே!' என்று உத்தாரம் கொடுத்தாள் அல்லி.

ஆனால்....

கதைகளில் மட்டும்தான் விதி சோதிப்பு நடத்தும் என்பதில்லை. அது மங்காத்தாளின்



# பாசம் எனும் பூவிலங்கு

பூவை ஆறுமுகம்

குடிசையிலும் குடிபுகுந்தது. அதற்கே விதிக்கப்பெற்ற சுயநிர்ணய உரிமையோடு.

கல்யாணப் பேச்சு வார்த்தையைத் துவக் கினாள் பெற்றவள். தன் சக்திக்குக் கூடுத லான காத்தமுத்துக் கங்காணியின் பேரனை வேலப்பனிடம் தன் அருமைத் திருமகளை ஒப்படைக்க வேண்டுமென்ற தன் திட்டத்தை வெளிப்படுத்தினாள்.

அல்லி சிரித்தாள்.

விதியாகவே சிரித்திருப்பாளோ?

''ஆத்தா! நான் முத்தையன் மச்சானைத் தான் கண்ணாலம் பண்ணிக்கிடுவேன்!'' என்றாள் அல்லி.

மகளின் பேச்சைக் கேட்டதும் நிலை மீறித் தவளாகத் திடுக்கிட்டாள்; திகைப்புற்றாள்; துணுக்குற்றாள், கிழவி. அடிநாளில் ஒரு சம யம், வயல் வரப்புக்கு ஆடிப் பட்டத்தில் நீர் பாய்ச்சும்போது, செல்லத் தேவன் கம்மா வில் விளைந்த 'முறைத் தண்ணீர்' தகராற்றின் விளைவாக இந்த முத்தையன் முறை தவறி மங் காத்தாளை ஏசிப் பேசிய பழைய நிகழ்ச்சியைப் புதுப்பித்துக் கொண்டிருந்தவள் ஆயிற்றே? ''அல்லி! நான் உன்னைப் பத்து மாசம் சுமந்து பெத்தவ. நல்லது கெட்டதை அனுசரிச்சுத் தான் இந்த நல்ல முடிவுக்கு வந்தேன். நீ குறி வைச்சிருக்கிற முத்தையனைப் பார்க்கிலும் நான் குறி வைச்சிருக்கிற வேலப்பன் எம் புட்டோ கைஞ்சந்த புளியங் கொம்பாக்கும்! ஆகச்சே, நிர யோசனை பண்ணிச் செப்புடி

# சொந்தம்

திரைக்கதையில் புதுமையைப் புகுத்த வேண்டும் என்னும் ஆசை இப்பொழுதெல்லாம் படத் தயாரிப்பாளர்களிடையே கொஞ்சம் கொஞ்சம் தலைகாட்டி வருகிறது. வரவேற்க வேண்டியதுதான். ஆனால், புதுமை என்று சொல்லிக் கொண்டு அசட்டுத்தனங்களைச் சேர்த்துவிடக் கூடாதே!

என்னதான் அத்தை மகனிடம் ஆசை இருந்தாலும் பி.எஸ் ஸி., பி.டி., பட்டதாரியான ஒரு பெண் படிக்காத அவனை மணக்க உடன்பட மாட்டாள். வைரத்தின் தந்தைக்குத் தன் மகளைப் படிக்காத முரடன் மாணிக்கத்துக்கு என்னதான் அவன் முறைப் பையன் என்றாலும், மணம் முடிக்க விருப்பமில்லை. மாணிக்கம் தன் பிடிவாத குணத்தினால், அவளை அடைந்தே தீருவதென்று சபதம் செய்கிறான். இந்த இக்கட்டிலிருந்து மகளைத் தப்புவிக்க அவள் தந்தை பக்கத்துக் கிராமத்துக்கு யாருக்கும் தெரியாமல் அவளை அனுப்பி வைக்கிறான். இதையறிந்த மாணிக்கம் அந்த வண்டியை வழியில் மடக்கி முறைப் பெண் வைரத்தைத் தன் வீட்டுக்கு அழைத்துச் செல்கிறான். தன்னைக் கவர்ந்து சென்று குடும்பத்துக்குக் களங்கம் ஏற்படுத்திய அத்தானைக் கொஞ்சமும் வெறுக்காமல் கணவனாக ஏற்கிறாள் வைரம்! மாணிக்கம் – வைரம் விவாகம் ஒரு விநாடியில் நடந்து விடுகிறது. (திரைக்கதையின் முற்பகுதியில் சிக்கல்கள் நிறைய இருந்தால் விவாகத்துக்குத் தடங்கல்கள் நிறைய ஏற்படும்; அப்படியின்றி திரைக் கதையின் பிற்பகுதியில் சிக்கல்கள் இருந்தால், விவாகம் முதலில் சுலபமாக நடந்துவிடும். இது தமிழ்ப்பட நியதி என்பதை அறிக!)

கல்வியறிவில்லாத கயவனைக் கைப்பிடித்த காரிகை வைரத்தை அவன் விலக்கி வைத்துக் கொடுமைப்படுத்துகிறான். (இந்தக் கட்டத்தில் திரைக் கதையில் இன்னதுதான் வருகிறது என்பதில்லை!) வைரத்தின் தோழி தங்கத்துக்கும் மாணிக்கத்துக்கும் முடிச்சுப் போட்டுப் பவர் பேசப் போக மாணிக்கம் அவளையே மணந்து கொண்டு விடுகிறான்; மாணிக்கத்தின் தந்தை மகனின் மூர்க்க குணம் காரணமாகத் திடீரென்று இறந்து விடுகிறார்; தங்கம் ஒரு பெண் குழந்தையைப் பெற்றுவிட்டு இறந்து விடுகிறாள். (ஒருவர் இரண்டு பெண்களை மணந்து கொண்டால் ஒருத்தி இறந்துதானே ஆக வேண்டும்!) வைரமும், மாணிக்கமும் – திருநீலகண்டரையும், அவர் மனைவியையும்போல் எட்டி இருந்தே வாழ்கிறார்கள்! (என்ன கதையோ, என்ன வேதனையோ போங்கள்!) கதை மேலும் தொடர்கிறது....!

மாணிக்கமாக வரும் முத்துராமன், தம் நடிப்புத் திறமையினால் அந்த அசட்டுப் பாத்திரத்துக்கு உயிர் கொடுக்கிறார். டி. கே. பகவதியின் நடிப்பு மிக மிக இயற்கையாயிருக்கிறது. வி. கே. ராமசாமி வைரத்தின் தகப்பனாராக வந்து நன்றாய் நடிக்கிறார். கே. ஆர். விஜயாதான் வைரம். அவர் நடிப்பும் வைரம்தான்! முக மலர்ச்சியோடு அகமும் மலர்ந்து சிரிக்கும் அவருக்

ராசாத்தி!'' என்று பதனமாகவும், பான்மையாகவும் கோரினான்.

''ஆத்தா! மனசு கொண்டதுதான் மாளிகை. என்னோட முடிவை நான் இனி இப்பிறப்பிலே மாத்துறதுக்கு இல்லே! ஆமா; முடிவாச் செப்பிட்டேன்!'' என்றாள் அல்லிக் கிளி.

மங்காத்தா கொதித்தாள். ''அடி பாவி! பொறந்த மகள் பெற்ற ஆத்தாளுக்குக் காட்டுற நன்றிக் கடன் தாய் சொல்லைத் தட்டுறதுதானா?...'' என்று சீற்றம் ஏற்றிச் சீறினாள்.

அல்லி மறுபடியும் சிரித்தாள். ''ஆத்தா! பெற்ற மகளோட ஆசைச் சொப்பனத்தைத் தவிசிவிக் குலைக்கத் துணியிறதுதான் பெற்ற ஆத்தாளோட நல்ல கடமையா?'' என்று தாயின் அதே சீற்றத்தோடு கேள்விக்கு எதிர்க் கேள்வி விடுத்தாள் அல்லி ராணி.

இப்படிப்பட்டதொரு வினவின் விதியைப் பாவம், கிழவி மங்காத்தா எதிர்பார்த்திருக்கவில்லை போலும்! திக்குமுக்காடிப் போனாள்.

''அடிப் பாவி மகளே! என்னையா எதிர்க் கேள்வி கேட்கத் துணிஞ்சிட்டே? இந்தாப் பாரு. இந்த மங்காத்தா சொன்னால் சொன்னதுதான். இந்த நாழியிலேருந்து உனக்கும் எனக்கும் உண்டான சொந்தமும் பாசமும் அத்துப் போச்சு. ஆமாம், சொல்லிப்புட்டேன்!'' என்று தீர்ப்பு வழங்கி விட்டாள்.

மீண்டும் சிரித்தாள் அல்லி. அழகுக்கு அழகு செய்த அணிகலன்களைக் கழற்றி மங்காத்தாவின் காலடியில் சமர்ப்பித்தாள். விராட்டி தட்டி விற்றுச் சேர்த்து வைத்திருந்த 'சிறுவாட்டுப் பணம்' நிரம்பிய உண்டியல் கலயத்தை மட்டும் அவளிடம் காட்டி எடுத்துக் கொண்டாள். குடிசையைத் துறந்தாள்.

தண்ணீரைத் தடி கொண்டு அடித்தாலும் தண்ணீரை விட்டுத் தண்ணீர் பிரியாது என் பார்களே?

அல்லி சுதந்திரப் பறவையாகி, காதல் பறவையாகிப் பட்டணத்துக்குப் பறந்தாள். நேசத்தைத் துறக்க மாட்டாமல், பாசத்தைத் துறந்து சென்றவள், நேசத்துக்குத் தன்னைக் காணிக்கை வைத்தாள். முத்தையாவின் அன்புக் கரங்களால் மூன்று முடிச்சுக்கள் பெற்றாள் அல்லி.

இந்தச் சேதி கிழவி மங்காத்தாளுக்கு எட்டியது. உயிர் பதைபதைக்க, ஈரக்குலை நடு நடுங்க உயிர்க் கழுவில் துடிதுடித்தாள். 'ஊர் நாட்டிலே இது பரியந்தம் மானமும் ரோசமும் காட்டி வாழ்ந்து காட்டிக்கிட்டு வந்த என்னை என்னோட வயித்திலே பொறந்த மகளே,

கும் பற்றற்ற விரக்திப் புன்னகை புரியவும் எளிதில் முடிகிறதே! பாராட்ட வேண்டியதுதான்!

பிரமீளாவுக்கு இரட்டை வேடம் — பட்டிக்காட்டுச் சாப்பாட்டுக் கடைத் தங்கம், லேடி டாக்டர் முத்து. இரண்டு வேடங்களிலும் அவர் சிறப்பாக நடித்திருக்கிறார்.

சிவகுமார் டாக்டர்; லேடி டாக்டர் முத்துவைக் காதலித்துப் படத்தில் பல குழப்பங்களை (சஸ்பென்ஸ் என்ற பெயரில்) ஏற்படுத்திப் படத்தைக் கனிசமாக நீட்ட உதவியிருக்கிறார். (இந்தக் கட்டங்கள் படத்தின் அலுப்புத் தட்டும் பாகங்கள்!)

கண்ணதாசனின் "கண்ணு படப் போகுது கட்டிக்கடி சேலையை" என்ற பச்சையான பாட்டு பாடப்படும் பச்சையான நதிக்கரைக் காட்சியில் கே. ஆர். விஜயாவும், பிரமீளாவும் நீராடுகின்றனர். 'நியூவேவ்' கவர்ச்சிக்காகச் சேர்த்திருக்கிறார்கள் போலும்! கலரோட்டி விளம்பரத்துக்கும் உதவுகிறது. திரைப் படக் கலைக்கு உதவவில்லை.

கதை, வசனம் காரைக்குடி நாராயணன் எழுத, டைரக்ஷனை அநுபவம்மிக்க ஏ. ஸி. திரிலோகசந்தர் ஏற்றுச் சிறப்பாய்த் தம் பணியைச் செய்திருக்கிறார்.

பல சறுக்கல்களையும் சரிவுகளையும் கொண்ட "சொந்தம்" மந்தமாக இல்லாமல் விறுவிறுப்பா யிருக்கிறது!

- காந்தன்



★ புதுமையைப் புகுத்து கிறோம் என்று சோதனை பண்ணு கிறார்களே! வேதனை யாய் முடிகிறதே!

வருக்கு முன்னே தலை குனிய வைக்கப்பட்டாளே!' என்று உருகி, உருக்குலைந்தான். அன்று பாதிச் சாமத்தில் குப்பைக் குன்றி மணியை அரைத்துக் குடிக்க முனைந்த தருணத்தில், அவள் சகோதரர் மாசிமலை அம்பலம் மாத்திரம் 'குறுக்குச் சால் ஓட்டி' வந்து பாயாமல் இருந்திருந்தால் மங்காத்தா செத்த இடத்தில் இந்த நேரம் பூண்டு முளைத்திருக்கும்!

விடிந்தது.

ஆனால், அந்த ஒற்றைத் தனிக் குடிசையில் தலைபாவிக் கிடந்த கிழவி மங்காத்தாளுக்கு மட்டிலும் இன்னமும் பொழுது விடியவில்லை போலும்!

தாய்ப் பசு தன் கன்றை அன்புடனும் பாசத்துடனும் நக்கி மகிழ்ந்துகொண்டிருந்த காட்சியைப் பார்த்து, பாசத்தின் நெகிழ்ச்சியால் உந்தப்பட்டு அவர் உணர்ச்சி வயப்பட்ட சமயம் வாசலைத் தாண்டி உள்ளே நுழைந்த மாசிமலை அம்பலம் "அக்கா!" என்று கூப்பாடு போட்டார்.

குரல் கேட்டதுதான் தாமதம், மங்காத்தா உணர்வுகள் சலனம் கொள்ள, படீரென்று கண்களை மலரத் திறந்தாள்.

அம்பலம் வியப்பின் வரிவடிவாகப் புன்னகை காட்டினார். "அக்கா! அக்கா! நம்ப அல்லிக்குட்டி — அதுதான் நீ பெற்றெடுத்த பொண்ணு அல்லி இன்னும் கொஞ்ச நாழிகையிலே உன் முன்னாடி வந்து குதிச்சுப்புடுமாக்கும்!" என்று விவரம் குறித்துவிட்டு, தமக்கையை வருடினார்.

"ஆ! மெய்யாலுமா?" என்று உணர்ச்சிக் கழிப்புடன் கேட்டாள் கிழவி மங்காத்தா. கேட்ட கேள்வியின் பாச அலைகள் ஓய்வதற்குள், அவளுடைய பஞ்சடைந்த நேத்திரங்களிலே குபுக்கென்று கண்ணீர்ச் சரம் தொடுத்தது.

"உனக்குச் சங்கதியே தெரியாதாங்காட்டி? நானும் சொன்னேன் நேத்திக்கு. எங்க பொன்னியும் சொல்லிச்சாம். என் போட்டா என் பொறிகிறதாட்டம் நேத்து முச்சூடும் தான் உனக்குக் கண்மண் புலப்படாத காய்ச்சலாச்சே!"

கிழவி என்னவோ சொல்ல அல்லது கேட்க விழைந்திருக்க வேண்டும். ஆனால், சொற்கள் கூடி வரவில்லை. சினுங்கல் இருமல்தான் கூடி வந்தது. "தம்பி, நீ விளையாடலையேப்பா?" என்று ஏக்கமும் தவிப்புமாகத் துருவினாள்.

"விளையாடறதுக்கு ஏத்த வேளையாக்கா இது?...."

"சரி சரி. பெத்த ஆத்தாளை இப்பவாச்சும் எங்கண்ணுப் பொண்ணு அல்லிக்குட்டி தேடி வந்திருக்குதே? அது இப்ப வந்திடுமா? வார தாய்த் தாக்கல் சொல்லி விட்டிருக்குதாங் காட்டி? அது ஒண்டிதான் வருமா? இல்லே, மாப்பிள்ளைக்காரரும் வருவாகளா? இவுங்க ரெண்டு பேரோட மூணுவது புள்ளி ஏதாச்சும் தோள்திக்கிட்டு வருமோ என்னவோ?" தலையணியின் விளிம்புகளில் சரம் சொட்டுச் சொட்டாக விளிம்பு கட்டியது.

"நேத்திக்கு இம்மாம்பொழுதுக்கு ஒனக்குத் தக்கா முக்கியாய்ப் போய், உன் உசிருக்கே ஆபத்து வந்துடுமோன்னு பயந்துபோயிட்டேனே அக்கா. முதல் அறுவலாய், அல்லியோட புருசனுக்குப் பட்டணத்துக்கு விவரம் சொல்லித் தந்தி கொடுக்கச் செஞ்சிட்டேன்! இந்நேரம் வந்திருக்கலாம். வழிநடையிலே அறந்தாங்கியிலே கார் கிடைச்சிருக்காது!" என்றார் மங்காத்தாளின் சகோதரர்.

கிழவியின் பெருமூச்சு காலைக் காற்றில் தடம் பதித்து, தடம் விலக்கிக் கேட்டது. தலையைத் தூக்க முயன்றவள் இப்போது அம்முயற்சியைக் கைவிட்டவளாகக் கண்களைச் சூன்ய வெளியில் செலுத்திப் பரிதாபமாகக் காட்சி கொடுத்தாள். "இம்புட்டுத்தானுக்கும் கதை! ஆத்தாளைப் பார்க்கிறதுக்காக அதுவாவே மனசு மாறி வருதோன்னு நான் தப்புக் கணக்குப் போட்டுப்புட்டேன்!...ம்... என் பொசிப்பு அவ்வளவுதான். பின்னே யாரைச் சொல்லி என்ன பண்ண?...'எதுக்கும் என்கிட்டக் கேட்டுக்கிணு நீ அல்லிக்குத் தந்தி பேசியிருக்கணும் தம்பி!" — ரோசம் அழுத்தமாகவே குரல் கொடுத்தது.

வேதனை தாளாமல் நெடுமூச்சை நெட்டித் தள்ளினார் மாசிமலை. "அக்கா! உனக்குப் புத்தி மறுகிடுச்சா, என்ன? வன்னிசாப்பதினெட்டு மாசமாச்சு நீயும் உன் மகளும் பிரிஞ்சு. பாசத்துக்குக் கசப்பில்லே அப்படின்னு ஒரு பேச்சுச் சொல்லிக்கிடுவாங்க. இந்தப் பேச்சு எம்புட்டு யதார்த்தமானது என்கிற துப்பை உன்னை வைச்சே நான் புரிஞ்சுக்கிடவும் தவறிடல்லே, அக்கா. நீ தவம் இருந்து சுமந்து பெத்த உன்னோட செல்வமகள் பேரிலே நீ செல்லமாய்ச் சடைப்படுறதுக்கு உனக்குப் பாத்தியம் இல்லாமல் இல்லே தான். ஆனா, அதுக்கோசரம், நீ சாகப் போறைக்கக் கிடக்கையிலே உன் மகளுக்குத் தகவல் சொல்லாமல் இருக்கலாமோ? கழிஞ்சது எல்லாம் கண்ணீரோட கழிஞ்சு தொலையட்டும். இனி ஆத்தா உன் குடும்பத்துக்கு மையமாய் நின்னு நல்ல வழி காட்டுவா. உன் மகளை நீ கண்ணுலே பார்த்திட்டா, நீ சடாருன்னு எந்திருச்சிக் குந்திக்கிடுவாயாக்கும். அந்த உளவு எனக்கில்ல தெரியும்!" என்று நயம்பட உரைத்தார் அவர்.

கிழவி மூச்சுப் பேச்சுக் காட்ட வேண்டுமே? ஊஹூம்!

வாசல் வெளியில் வண்டிச்சத்தம் கேட்டது.

"அக்கா! உன் மகளும் மாப்பிள்ளையும் வந்தாச்சு. ஓடிப்போய்க் கையோட கூட்டிக்கிட்டு வாரேன்" என்று ஆனந்தம் நிறக்கச் சொல்லிவிட்டு, துவாலையையும் மறந்தவராக வெளியே ஓடினார் மாசிமலை அம்பலம்.

'அல்லி!... அல்லிப் பொண்ணே!...'

கிழவி மங்காத்தாளின் உந்திக் கமலத்தினின்றும் பாசத்தின் அழைப்பு உள்வட்டமாக உருவிச் சுழித்துக் கரைந்தது. வாரிச் சுருட்டிக் கொண்டு எப்படித்தான் அத்தனை இளைவில் அவளால் எழுந்து உட்கார முடிந்ததோ?

வேகமாகத் திரும்பினார் அம்பலம்.

'எங்கே என் பொண்ணு?' என்று தவித்துத் தடுமாறியது தாய் மனம். சுற்றுமுற்றும் ஆர்வமும் ஆனந்தமும் துள்ள நோக்கினாள். அல்லி அவளது பார்வைக்கு அகப்படாமற் போகவே ஏமாற்றம் அடைந்தாள். நெஞ்சைத் தடவி விட்டுக் கொண்டாள். தம்பியை ஏக்கத்தோடு பார்வையிட்டாள்.

"அக்கா! அல்லி வந்திருச்சு. அது மட்டும்தான் வந்திருக்குது!... அதோட ஆசை மச்சான் முத்தையா மாப்பிள்ளை வரல்லே போலே. ஒரு சமயம் அப்பாலே வந்தாலும் வரும்போலிருக்குது. அது சரி. உன்னோட அருமை மகள் இம்புட்டுக் காலம் கழிச்சு உன் வீடு தேடி வந்திருக்குதே? நீ 'வா'ன்னு ஒரு பேச்சுச் சொன்னால்தானே அது வரும்? வேப்பந் தூரடியிலே தவிச்சுத் தடுமாறிக்கிட்டு நிக்குதே அல்லி! இங்கிருந்த வாக்கிலேயே 'வாடி அல்லிக்குட்டி!' அப்படின்னு குரல் கொடு அக்கா!..." என்றார் மாசிமலை.

ஆ!

## நாவல் விமர்சனம்!



மனிதனின் முதல் நாற்பது ஆண்டுகள் ஒரு முழு நீள நாவல். அடுத்து வரும் ஆண்டுகள் அந்த நாவலுக்குக் கிடைக்கும் விமர்சனம்! - கன்னிகா

கிழவியின் சோகம் கப்பிய முகத்திலே ஏன் இப்படி நிர்த்தாட்சிண்யமான கோபாவேசம் பொங்கி வழிகிறது?

"ஏ மாசிமலே, என்னு சொன்னே நீ? என் பேச்சைத் தண்டு முறிச்சுப்புட்டு ஓடினவளே நான் வான்னு வெத்திலே பாக்கு வச்சு அழைக்கணுமா? சுரைஞ்சு மாசம் என்னோட உயிரைக் கொடுத்து வளர்த்த என் மகளுக்குப் பெற்ற ஆத்தாளை விட நேச மச்சான் ஒசத்தியாத் தோணிடுச்சு! இந்த அவமானம் இன்னமும் என்னைச் சுட்டுப் பொசுக்கிக்கிட்டு இருக்குது. இந்த அவலத்திலேயும் அலங்கோலத்திலேயும் நான் தவிக்கிறது பத்தாதாக்கும்? அவளைக் கூப்பிடச் சொல்லி நீ வேறே தூபம் போடுறியே? உனக்கு வெட்கமா யில்லே? அவளை 'வா'ன்னு அழைக்கவே மாட்டேன். அவளா இஷ்டப்பட்டு அவ வீட்டிலே அடி எடுத்து வைக்கட்டும். என் வயிற்றிலே பொறந்த அவளுக்கே இத்தனை ரோசம் இருந்தாக்க, அவளைச் சுமந்து பெற்ற எனக்கு எத்தனை ரோசம் கூடுதலாய் இருக்கும்?... மாசிமலே! நீ உன் சோலியைப் பார்த்துக்கிட்டு நட!" என்று ஆத்திரம் கனல் கக்கப் பேசினுள் கிழவி.

"அக்கா! தாய்ப் புலி எட்டடி பாய்ஞ்சால் அது போட்ட குட்டியோ பதினாறு அடி பாயுமாம்! உனக்கே இத்தனை வீம்புன்னு, நீ பெற்ற மகளுக்கு இன்னும் விச்சான வீம்பு இருக்கத்தானே இருக்கும்? என்னமோ ஒரு கெட்ட காலம் உங்க ரெண்டு பேரோட வீம்பும் பிடிவாதமும் ரோசமும் ஆடிக் கூடி விளையாடி, விளையாட்டுக் காட்டி, பெற்ற ஆத்தாளையும், பிறந்த மகளையும் காடு மேடாக்கிப் பிரிச்சுடுச்சு.

"அக்கா! பாசத்தோட பரிசுத்தமான சந்நிதானத்திலே மானம், ரோசம், பிடிவாதம் எல்லாம்கூடத் துச்சம்தானுக்கும்! ஆத்தா — மகள் பாசத்தை முறிச்சது நீயான படியினுலே நீயேதான் உன் மகளை 'வா'ன்னு அழைக்க வேணும். நீ ஆபத்தான நிலேயிலே இருக்கிறதாகத் தந்தி கண்ட உடனே ஓடிப் பறந்து வந்திருக்கிற உன் மகளை 'வா'ன்னு கூப்பிட நீ இனியும் மேஷ ரிஷபம் பார்த்தால், இப்பவே உன் மகள் அல்லி வந்த வழியிலேயே ஊருக்குப் புறப்பட்டுப் போயிடும். இந்த ரகசியத்தையும் புட்டு வைச்சுப்பிட்டேன். அப்பாலே உன் விதி! கண்ணுக்குப் புரியாத விதியைக் கைநீட்டிக் கூடிப் பிடிக்க யாராலே ஏலும்! அப்புறம் ஆத்தா அங்காளம்மை விட்ட வழி!"

மாசிமலே அம்பலம் பேச்சை நிறுத்தினர்.

ஆனால்...

தாய்க் கிழவி மங்காத்தா இன்னமும் கல்லாகவே சமைந்து கிடந்தாள்.

அம்பலம் வேதனையும் ஆத்திரமும் சூடேற இருக்கையை விட்டுக் கிளம்பினர்.

அப்போது:

கிழவியின் வீட்டுக் கன்றுக்குட்டி ஓடிவந்து திண்ணையில் நின்றது. மறுகணம் கன்றைத் தேடித் தாவிப் பாய்ந்து வந்த தாய்ப் பசு தன் கன்றைக் கண்டதும் மகிழ்ச்சியால் துள்ளிக் குதித்தபடி, கன்றை நாவினுல் நக்கி மகிழ்ந்து கொண்டிருந்தது.

கிழவி இக்காட்சியைக் கண்டதுதான் தாமதம், குபுக்கென்று அவளுடைய இடுக்கு விழுந்த கண்கள் நிரம்பி வழியத் தொடங்கின. உணர்வுகள் கழிக்க, "மகளே, அல்லிக் குட்டி!" என்று ஓலமிட்ட வண்ணம், பாசத்தின் துடிப்புடன் துள்ளி வாரிச் சுருட்டிக் கொண்டு படுக்கையை விட்டு எழுந்தாள். ஓட்டமும் நடையுமாக வாசலுக்குப் பாய்ந்தாள். வழியில் கிடந்த கல் தடுக்கிற்று. விழுந்தாள்; ரத்தம் இளங் கதிரொளியில் சிரித்தது. "அல்லி! அல்லிக் குட்டியோ!" என்று அழைத்துக் கொண்டே ஓடினுள் ஆத்தாள் மங்காத்தா.

"ஆத்தா!" என்று அலறிப் பாய்ந்து வந்தாள் அல்லி.

கிழவி தன் அருமைப் புதல்வி அல்லியை வாரி அணைத்துக் கொண்டே சின்னப் பெண் மாதிரி தேம்பித் தேம்பி அழுதாள். பிறகு மகளை நோக்கி ஏறிட்டு விழித்தவாறு, "அல்லி! எம்பேரிலே உள்ள பிணக்கு உன்னோட நேச மச்சானுக்கு மட்டும் தீரலேயாங்காட்டி? ஏன் மாப்பிள்ளை வரல்லேயாம்?" என்று ஆவல் துள்ளக் கேட்டாள் அவள்.

"ஆத்தா! என்னோட ஆசை மச்சான் இனி இங்கிட்டு வரமாட்டாங்களாக்கும்!"

"ஐயையோ! நாமதான் ராசியாகிக் கூடிக்கிட்டோமே?"

"ஆனு என் மச்சான்காரர் என்னோடே 'டு' போட்டுட்டுப் போயிட்டாங்களே, ஆத்தா?"

"எங்கே போயிட்டாங்க என் மாப்பிள்ளை?"

"எங்கேயும் போயிடல்லே ஆத்தா! என்னோட அன்பான வயிற்றிலேதான் குடியிருந்துக்கிட்டு வர்றாங்களாக்கும் என்னோட ஆசை மச்சான்! அந்த ஆறுதலிலேதான் பட்டணக் கரையிலே ஆப்பம் சுட்டு வாழ்ந்துக்கிட்டிருக்கேனுக்கும்!"

"ஐயையோ!" என்று ஓலமிட்டாள் கிழவி. "ஐயோ, தெய்வமே!... இந்த இடிசாமச் சேதியைக் கேட்கத்தானு என்னை உசிரோட பொழைக்க வச்சே? ஐயையோ, என்னோட பாழாய்ப்போன வீம்புப் புத்தி என்னோட ஆசை மகளையே உசிரோட பலி வாங்கிக்கிடுச்சே?" என்று மண்டையிலே அடித்துக் கொண்டு கதறி அழுதாள் மங்காத்தா. மறு கணம் அடி சாய்ந்த மரமாக மண்ணிலே சாய்ந்தாள்!

"ஆத்தா! ஐயையோ, ஆத்தா!"

பாசம் வீறிட்டு அழுதது.



# தரிசனம்

சக்தி

**ப**ண்ணையின் களத்துமேடு. எள்ளு நன்கு உதறப்பட்ட பின்பு செங்காயம் தனியே போர்போல் குவிக்கப்பட்டிருந்தது. மூட்டாகக் கட்டி வைக்கப்பட்டிருந்த எள்ளை முறங்களில் அள்ளி எடுத்து நான்கு ஆட்கள் தனித் தனியே இரண்டு இடங்களில் கொஞ்சம் கொஞ்சமாகக் கீழே கொட்டித் தூற்றிக் கொண்டிருந்தார்கள். காற்றிலே பறந்து தூசு தும்புகள் தூரத்தில் விழுந்து கொண்டிருந்தன. தூற்றி முடித்தவுடன் ஓர் ஆள் எள்ளுமூட்டின் இரு பக்கங்களையும் முறத்தால் நன்கு வேகமாக வீசித் தப்பித் தவறி விழுந்திருந்த பொட்டுபதர்களைச் சுத்தமாக வெளியேற்றி விலக்கிக் கொண்டிருந்தான்.

தங்களுடைய வேலைகள் முடிந்து விட்டதால் பெண்பிள்ளைகள் தங்களின் தலையிலே படிந்திருந்த தூசு தும்பைத் தட்டியும்; அள்ளிச் செருகியிருந்த முடியை அவிழ்த்து உதறியும்; கைகால்களைத் துடைத்தும் உடலைச் சுத்தப்படுத்திக் கொண்டு நின்றுகொண்டிருந்தார்கள்.

நடந்து கொண்டிருந்த வேலையை மேற்பார்வை செய்துகொண்டிருந்தான் காத்தமுத்து. அவன் நாற்பத்தைந்து வயதைக் கடந்தவனாயிருந்தும் கட்டுக் குலையாத உடலோடுதான் காட்சியளித்தான். தலைமயிர் மட்டும் கொஞ்சம் நரைத்திருந்தது. என்றாலும் அது அவனுடைய கம்பீரமான முண்டாசிலே மறைந்து போயிருந்தது. அவன் பண்ணையின் முக்கியமான ஆள் மட்டுமல்ல, முழு நம்பிக்கைக்கும் உரிய ஆள். அவனுக்கு விவசாயத்தில் தெரியாத வேலை என்று ஒன்றுமில்லை. எல்லா வேலைகளையும் அவன் வேகமாகவும், விசுவாசத்தோடும், பொறுப்பாகவும், சாமர்த்தியமாகவும் செய்வான்.

அவனிடத்திலே எந்த ஆளும் நெளித்துச் சுளித்துக் கொண்டு நேரத்தை ஓட்ட முடியாது. எவ்வித தளுக்கும், குலுக்கும் செல்லாது. வேலையாட்களிடம் வேலை வாங்குவதில் ரொம்பக் கண்டிப்பாகவும், கடுமையாகவும் இருப்பான். தகிடுதத்தம் பண்ணுகின்றவனுடைய, எவளுடைய பாச்சாவும் அவனிடத்தில் பலிக்காது. தப்பு செய்கின்றவர்களைத் தயவுதாட்சண்யம் பார்க்காமல் தண்டித்துவிடுவான். ஆகையினால் பொதுவாக அந்தப் பண்ணை ஆட்களுக்குக் காத்தமுத்துவைக் கண்டாலே கொஞ்சம் பயம்தான்.

ஆனால் அவன் மீது பண்ணையிலே பண்ணை அடிக்கிற ஆட்களும் சரி, தினக் கூலிக்கு வந்து வேலை செய்துவிட்டுப் போகிற ஆட்களும் சரி ஒரு தனியான அன்பும், மரியாதையும் கொண்டிருந்தார்கள். அதற்குக் காரணம் அவனுடைய மனிதாபிமானம்தான். அவன் எவ்வளவுக்கெவ்வளவு வேலை வாங்கும் போது கெடுபிடியாக நடந்து கொள்வானோ, அவ்வளவுக்கவ்வளவு கூலி போடும்போது தாராளமாகவும், நேர்மையாகவும் நடந்துகொள்வான்.

'காத்தமுத்து ஐயா காப்படி கூடப் போட்டுக் கூலி கொடுத்தாங்க' என்று ஆட்களெல்லாம் மனம் மகிழ்ந்து வாழ்த்திச் செல்வார்களே ஒழிய, 'கொடுக்க வேண்டியதிலே காப்படி குறைத்துக் கொடுத்தாங்க' என்று மனம் வருந்திக் குறை கூறிச் செல்ல மாட்டார்கள்.

''தூற்றி முடிச்சாச்செல்லே. ஏன் அப்புறம் நின்னுக்கிட்டிருக்கிங்க? ஏய், முத்துவேலு! சாக்குக் கட்டை அவுத்துப் பிரி. முனியா! தொப்புளான்! நீங்க ரெண்டு பேரும் மரக்காலை எடுத்து வந்து அளந்து போடுங்க'' என்று தன்னுடைய முண்டாசை அவிழ்த்த வண்ணம் கட்டளையிட்டான் காத்தமுத்து.

''என்னங்க எசமான். நீங்கல்ல வழக்கமா முதல்லே மரக்காலைப் பிடிச்சி அளப்பீங்க. இன்னிக்கு வழக்கத்துக்கு மாறு எங்களை அளக்கச் சொல்றீங்களே!'' என்று வியப்போடு வினவினான் தொப்புளான்.

'' என்னத்த வழக்கம் வேண்டியிருக்கு. நான் இன்னிக்கு அளக்கப் போறதில்லே. நீங்களே அளந்து போடுங்க'' என்று காத்தமுத்துவின் வாயிலிருந்து சலிப்போடு வார்த்தைகள் வெளிப்பட்டன.

அவன் அப்படிச் சொன்னதும், நடந்து கொண்டதும் தொப்புளானுக்கு மட்டுமல்ல, எல்லா ஆட்களுக்குமே ஓர் ஆச்சரியமாய் இருந்தது.

''என்ன, சாமி! ஒங்களுக்கு இன்னிக்கி ஒடம்பு சரியில்லையா? காத்தாலே யிருந்தே ஒங்க முகம் ஒரு மாதிரியாவே இருக்குதுங்களே!'' என்று உள்

மையான பாசத்தோடும் பரிவோடும் கேட்டவாறு அவனை நோக்கி வந்தாள் முத்துவேலுவின் மனைவி மங்கம்மா.

''அதெல்லாம் ஒன்னுமில்லே மங்கம்மா!'' என்று பதிலளித்த காத்தமுத்து ஒரு வறட்டுப் புன்னகையை வலிய வரவழைத்து அவளைப் பார்த்து உதிர்த்தான்.

''சின்னசாமிக்கு அடுத்த வாரம் கண்ணாலமில்லே. வேலை வெட்டி நெறைய இருந்திருக்கும். அதனாலேதான் சாமி களைப்பா யிருக்காங்க'' என்று தனக்குப் பட்டதை எடுத்துச் சொன்னாள் எள்ளு முட்டுக்குப் பக்கத்திலே நின்றுகொண்டு அளந்து போடும் எள்ளைச் சாக்கிலே பிடித்துக் கொண்டிருந்த பூவாயி.

அதைக் கேட்டும் கேட்காதவனைப் போல் நின்றுகொண்டிருந்தான் காத்தமுத்து. அதற்குப் பிறகு யாரும் அவனோடு பேச்சுக் கொடுக்க முன் வரவில்லை.

ஒவ்வொருவரும் தங்களுடைய வேலையில் மும்முரமாக ஈடுபட்டிருந்தனர்.

மாடுகளின் சதங்கை ஒலி குலுங்கக் களத்து மேட்டருகே வந்து நின்றது வண்டி. அதிலிருந்து கீழே குதித்து இறங்கிய சிங்காரம் சாட்டைக் குச்சியைக் கையிலெடுத்துக்கொண்டு காத்தமுத்துவை நோக்கி வந்தான்.

''என்னண்ணே! இந்த வருஷம் கண்டு முதல் எப்படி இருக்கு? போன வருஷத்துக்குக் கூடுதல்தானே?'' என்று கேட்டவாறு கட்டி வைக்கப்பட்டிருந்த மூட்டைகளை நோட்டம் விட்டான் சிங்காரம்.

''மூணு மூட்டை கூடக் கண்டிருக்கு'' என்று கரத்தின்றிப் பதில் சொன்னான் காத்தமுத்து.

''அண்ணே! உங்ககிட்டே ஒன்னு முக்கியமா சொல்ல மறந்துட்டேனே. உங்க சின்னப் பையன் தங்கராசு உங்களைத் தேடிக்கிட்டுப் பண்ணைக்கு வந்தான். பொன்னு வீட்டிலே விருந்து யாரோ வந்திருக்காங்களாம். அக்கா உங்களைச் சீக்கிரம் வீட்டுக்கு வரச் சொல்லிச்சாம்'' — என்று சிங்காரம் அக்கறையோடும் ஆர்வத்தோடும் கூறியதைப் பிடிப்பில்லாமல் கேட்டுக் கொண்டிருந்தான் காத்தமுத்து. சிங்காரம் தொடர்ந்து பேசினான்.

''ஏண்ணே! என்னவோபோல இருக்கீங்க? கல்யாணத்துக்கு நாளு நெருங்கிடுச்சேன்னு யோசிக்கிறீங்களா? அதெல்லாம் ஒன்னும் கவலைப்படாதீங்க. நம்ம பண்ணையாட்களெல்லாம் எதுக்கு இருக்காங்க? அவுங்கள்ளே ரெண்டு மூணு பேரை உதவிக்கு வைச்சிக்கிட்டு எல்லாக் காரியத்தையும் செஞ்சு முடிச்சிடலாம்.''

''பண்ணை முன்னமாதிரி இல்லே சிங்காரம். அதெல்லாம் பெரிய ஐயா காலத்தோட போயிடுச்சு. இந்தச் சின்ன ஐயாவுக்கு மனுஷங்க அருமை ஒன்னும் தெரியலே. நாம என்னதான் மாடா உழைச்சாலும் கொஞ்சம் கூட நன்றி விசுவாசம் இல்லாம அவர் நடந்துக்கிறாரு.''

''நீ சொல்றது உண்மைதானண்ணே! நானும் பெரிய ஐயா காலமானதிலிருந்து கவனிச்சுக்கிட்டுத்தான் வர்றேன். சின்ன ஐயாகிட்டே பிடிவாதமும் முரட்டுத்தனமும்தான் இருக்கே யொழியக் கொஞ்சம்கூட மனிதாபிமானமில்லே, தன்னுடைய சொத்து சுகத்திலே குறியா யிருக்கிறாரே தவிர மத்தவங்களுடைய கஷ்ட நஷ்டத்தைப் பத்திக் கவலைப் படறதே யில்லே.''

''நாலு நாளைக்கு முன்னே ஒரு விஷயம் நடந்திச்சி. அதுலேயிருந்து எனக்கு மனசே சரியில்லே. நீ அதைக் கேட்டா ரொம்ப வருத் தப்படுவே. இருந்தாலும் வண்டியிலே போவும்போது சொல்றேன்'' என்று சிங் காரத்திடம் கூறியவாறு ஆட்களைப் பார்த்து, ''சீக்கிரம் மூட்டைகளை வண்டியிலே ஏத்துங்க. நேரமாயிடுச்சி'' என்று கட்டளையிட்டான்.

என்று மூட்டைகளை ஏற்றிக் கொண்டு வண்டி பண்ணையார் வீட்டை நோக்கிப் புறப்பட்டது. சிங்காரம் வண்டியை ஓட்டிக் கொண்டு சென்று கொண்டிருந்தான். அவ னுக்குப் பின்னாலே மூட்டைகளின் மீது உட் கார்ந்திருந்தான் காத்தமுத்து. இருவருக்கு மிடையே மீண்டும் உரையாடல் தொடங்கி விட்டது.

''நம்ம பண்ணைய ஆளுங்க வீட்டுக் கல் யாணம்னு பெரிய ஐயா தன் வீட்டுக் கல் யாணம் மாதிரி முன்னே யிருந்து எல்லா வேலை களையும் செய்வாங்க. இந்தச் சின்ன ஐயா என்னடான்னு நேருக்கு மாறு நடந்துக் கிறாரு. நான் என் மையன் கல்யாணத்தைப் பத்திப் பெரியம்மா கிட்டேயும், சின்ன ஐயா கிட்டேயும் சந்தோஷத்தோட சொன்னேன். உடனே அவரு, 'அதுக்கு என்னை என்ன செய்யச் சொல்றே?' அப்படீன்னு எடுத் தெறிஞ்சாப்பலே கேட்டுட்டாரு.''

''பார்த்தியாண்ணே! இருபது வருஷமா விசுவாசமா வேலை பார்த்துக்கிட்டிருக்கிற உங் கிட்டவே எப்படி நடந்துக்கிட்டாங்க பாரு. இதுதான் பண்ணைக்காரங்க குணம். நீதான் ஒரேயடியாப் பண்ணையை தலையிலே தூக்கி வைச்சுக்கிட்டு ஆடறே. ஆனா அவுங்க ஒண் ணும் உன்னை மதிக்கிறதில்லே. ஆமாம். பெரி யம்மா ஒண்ணும் சொல்லலியா? அவுங் களும் கம்மா இருந்துட்டாங்களா?''

''அந்தப் புண்ணியவதியைக் குறை சொல்ல முடியுமா சிங்காரம். அவுங்க உடனே சின்ன ஐயாவைப் பார்த்து, 'நம்ம பண்ணைய ஆளுங்க வீட்டுக் கல்யாணத்துக்கு இருநூறு ரூபாய் பணத்தோடு தாலியும் செஞ்சு கொடுக்கிறது வழக்கம். காத்தமுத்து நம்ம பண்ணையிலே முக்கியமான ஆளு. அதனாலே ஐந்நூறு ரூபாய் பணத்தோட தாலியும் செஞ்சு கொடு'ன்னு சின்னஐயாகிட்டச் சொன்னாங்க. ஆனா அவரு ஒரேயடியா மறுத்துச் சத்தம் போட்டுப் பேசி விட்டு இருநூறு ரூபாய் பணம் மட்டும் தந்தாரு.''

''ஆமாம், நீ என்னண்ணே செஞ்சே?'' சற்றுக் கோபமாகவே கேட்டான் சிங்காரம்.

''நான் என்ன செய்யறது? பேசாம கொடுத் ததை வாங்கிக்கிட்டு வந்துட்டேன்.''

''என்னண்ணே நீ! பெரிய தப்பு செஞ் சிட்டியே. நீ அதை வாங்காம உன் பணமும் கெட்டுது நீயும் கெட்டேன்னு தூக்கி மூஞ்சி திலே வீசி எறிஞ்சிவிட்டு வந்திருக்க வேண் டாம்? அதைவிட்டுவிட்டுப் பேசாம வாயை மூடிக்கிட்டு வாங்கிக்கிட்டு வந்துட்டியே!''

''அதெப்படி சிங்காரம்? அவுங்கதான் அப் பிடி நடந்துக்கிட்டாங்கன்னு நாமும் அப்பிடி நடந்துக்க முடியுமா? என்ன இருந்தாலும் நாம அவுங்களை அண்டிப் பொழைக்கிறவங்க தானே!'' என்றான் காத்தமுத்து.

''என்ன பெரிய பொழைப்பு. இப்பிடிப் பொழைக்கிறதைவிட நாம பிச்சை எடுத்துப் பொழைக்கலாம். அவுங்க நமக்கென்ன எனுமாவா கொடுக்கறாங்க? நாம ராத்திரிப் பகலா உழைக்கிறோம். அதுக்குக் கூலி தராங்க'' என்று ஆவேசத்தோடு பேசிய சிங் காரம் சாட்டைக் குச்சியால் ரெண்டு மாட் டையும் ஒரு விளாசு விளாசினான். பாவம்! மாடு இரண்டும் மிரண்டுபோய் ஓட முயன்ற போதிலும் வண்டியில் ஏற்றப்பட்டிருந்த மூட்டைகளின் அதிக பாரத்தினால் வேகமாக நடக்கத்தான் முடிந்தது. காத்தமுத்து ஒன் றும் பேசாமல் உட்கார்ந்திருந்தான். சிங்கா ரம் மீண்டும் பேச்சை ஆரம்பித்தான்.

''இவுங்ககிட்டே யெல்லாம் நல்ல முறை யிலே நடந்துக்கிட்டா நாம வாழ முடியாது.

## '' சில்ப கலா ரத்னம் ''

புதுதில்லியில் உதித்துள்ள உத்தர ஸ்வாமி மலை ஆலயத்தின் அமைப்பை நாடு முழுதும் போற்றுகிறது. அங்கு நிகழ்ந்த கும்பாபிஷேக வைபவச் சிறப் பைத் தேசம் ஒருமுகமாகக் கொண் டாடுகிறது.

இவ்வாலயத்தை அமைத்த தலைமைச் சிற்பி திரு வி. கணபதி ஸ்தபதி அவர்கள். மாமல்லபுரம் சிற்பப் பயிற்சி நிலையத்தின் மேற் பார்வையாளராக இருப்பவர். சாஸ்திரப் பிரகாரம் அற்புதமான தெய்வ வடிவங் களை வடிப்பதிலும், கோயில்கள் நிர் மாணிப்பதிலும் புகழ் கொண்டவர். இந்த அருங்கலைச் செல்வருக்குக் கும்பாபிஷேகத்தை ஒட்டிப் புது தில்லிக்கு விஜயம் செய்த ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி சங்கராசாரிய ஸ்வாமிகள் ''சில்ப கலாரத்னம்'' என்ற விருது சூட்டி அநுக்கிரகித் தார்கள்.



கெட்ட முறையிலே நடந்தாத்தான் வாழ முடியும். நீ கொஞ்சம் கண்டுக்காமல் இரு. நான் எல்லாத்துக்கும் வழி பண்ணிடறேன்.''

''என்ன சொல்லறே? எனக்கொண்ணும் புரியலியே!''

''உனக்கு ஒண்ணும் புரியாது. புரிஞ்சாலும் நீயொண்ணும் செய்ய மாட்டே. ஏன்னு உன் ரத்தத்திலே எசமான விசுவாசம் ஊறிக் கிடக்கு. நான் நல்லவனுக்கு நல்லவன், கெட்டவனுக்குக் கெட்டவன். வண்டி பெரிய கொல்லே வழியாப் போறப்ப கள்ளி மறைவிலே ரெண்டு மூட்டையைத் தள்ளிப் போட்டுடறேன். மத்ததெல்லாம் நான் பார்த்துக்கிறேன்.''

''அதெப்படி சிங்காரம்? என்னை நம்பித் தானே இந்த மூட்டைகளைக் கொண்டுவரச் சொல்லி யிருக்காங்க. நான் தப்பு செய்யறது நியாயமா?''

''ஆமாம்... ஆமாம். ரொம்ப ஞாயத்தைக் கண்டுட்டே ஞாயத்தை. அவுங்களை முழுசா நம்பி உழைச்சியே. அவுங்க நீ நம்பின மாதிரி நடந்துக்கிட்டாங்களா? கம்மா நான் சொல்றபடி நடந்துக்கணும். என் கோபத்தை வீணாக் கௌப்பாதே!''

அதற்கு மேல் காத்தமுத்து ஒன்றும் மறுத்துப் பேசவில்லை.

சிங்காரமும், காத்தமுத்துவும் தங்கவேலு பத்தர் வீட்டை நோக்கிச் சென்றனர். தூரத்தில் சென்று கொண்டிருக்கும்போதே பத்தர் வீட்டில் பண்ணையின் கணக்குப்பிள்ளை உட்கார்ந்திருப்பதை இருவரும் கவனித்து விட்டனர்.

காத்தமுத்து கொஞ்சம் தயங்கி நின்றான்.

''என்னண்ணே! ஏன் நின்னுட்டே? கணக்குப்பிள்ளை உட்கார்ந்திருக்காரேன்னு பார்க்கிறியா? அவரு இருந்தா நமக்கென்ன? கம்மா வா'' — என்று சொன்னவாறு முன் நடந்தான் சிங்காரம். அவனைப் பின்தொடர்ந்தான் காத்தமுத்து.

இருவரையும் கண்ட கணக்குப்பிள்ளை, சிரித்த முகத்தோடு: ''வா, காத்தமுத்து. உன் விஷயமாத்தான் நான் பத்தரைப் பார்க்க வந்தேன். அவரும் தாலியைச் செஞ்சு முடிச்சுட்டாரு. இந்தா இந்தத் தாலி நல்லா இருக்கான்னு பாரு. உன் மகள் கல்யாணத்துக்காகத்தான் செஞ்சிருக்கு'' என்று தம் கையில் வைத்துப் பார்த்துக் கொண்டிருந்த தாலியை எடுத்துக் காத்த முத்துவின் கையில் கொடுத்தார்.

அளவு கடந்த ஆச்சரியத்தோடும் கொஞ்சம் அதிர்ச்சியோடும் அதை வாங்கிப் பார்த்த காத்தமுத்து, ''நல்லா இருக்குங்க'' என்று சந்தோஷத்தோடு கூறியவாறு அதை அவரிடமே திருப்பிக் கொடுத்தான். சிங்காரம் ஒன்றும் விளங்காது வியப்போடு கவனித்துக் கொண்டிருந்தான். கணக்குப்பிள்ளை தொடர்ந்து சொன்னார்:

''முந்தாநாளே உன் வீட்டுக்கு வந்து விஷயத்தைச் சொல்லிட்டு வரலாம்னு நினைச்சேன். ஆனா வேலே ஒழியலே. நீ அன்னிக்கி போனப்புறம் சின்னய்யாகிட்டே பெரியம்மா அவரு உன்கிட்ட நடந்துக்கிட்டதைப் பத்தி ரொம்பக் கோவிச்சுக்கிட்டாங்க. 'நான் உயிரோட இருக்கிறவரைக்கும் இந்தப் பண்ணை யோட பழக்க வழக்கத்தை மாத்த மாட்டேன். நம்ம பண்ணை கௌரவத்தை நீ காப்பாத்தாவிட்டாலும் நான் காப்பாத்தத் தவற மாட்டேன். எப்படியும் காப்பாத்தியே தீருவேன்'னு ஆவேசமா சின்ன துயாவைப் பார்த்துச் சொல்லிவிட்டுப் போயிட்டாங்க. கொஞ்ச நேரம் கழிச்சு என்னைக் கூப்பிட்டு அனுப்பிச்சாங்க. நான் போனேன். அப்பொழுது பெரிய அம்மா அழுதுக்கிட்டிருந்தாங்க'' என்று சொன்ன கணக்குப் பிள்ளை உள்ள நெகிழ்ச்சியால் மேலே சொல்ல முடியாது கொஞ்சம் நிறுத்தினார்.

பதற்றத்தோடும், பாசத்தோடும், ''ஏங்கய்யா பெரியம்மா அழுதுக்கிட்டிருந்தாங்க?



★

"சிவாகமமணி"

சிவாகம சிரோமணி இருவாடானை பிரம்மஸ்ரீ அய்யாமணி சிவம் அவர்கள் ஆகம நுணுக்கங்களைக் கரைந்துக் குடித்த மகாவித்வான் ஆவார்கள். இவர்களது சீரிய மேற்பார்வையில்தான் உத்தர சுவாமிமலை கும்பாபிஷேகச் சடங்குகள் சாங்கோபாங்கமாக நிறைவேறின. பிரம்மஸ்ரீ அய்யாமணிசிவம் அவர்களின் பெயரிலேயே ஒரு 'மணி' இருப்பதைச் சுட்டிக்காட்டி, அவருக்கு "சிவ ஆகம மணி" என்ற விருதை ஸ்ரீ புதுப் பெரியவர்கள் வழங்கி ஆசி நல்கினார்கள். திரு ஆர். வி. சால்வை போர்த்திப் பாராட்டி மகிழ்ந்தார்.

★



## இரண்டாவது டெஸ்ட்

'கைக்கெட்டியது வாய்க்கு எட்டவில்லை' என்பது நியூஸிலாந்தைப் பொறுத்தவரை இரண்டாவது டெஸ்ட்டில் உண்மையாயிற்று. இங்கிலாந்தை எதிர்த்து நியூஸிலாந்து இதுவரை ஒரு டெஸ்ட்கூட வென்றதில்லை என்ற நிலையில் லார்ட்ஸ் மைதானத்தில் விளையாடப்பட்ட இரண்டாவது டெஸ்ட்டின்போது வெற்றியை நியூஸிலாந்து தட்டிக்கொண்டு போய் விடும்போல்தான் தெரிந்தது. முதல் இன்னிங்ஸில் ஒன்பது விக்கட் நஷ்டத்துக்கு 551 ரன்களைக் குவித்திருந்தனர் நியூஸிலாந்து ஆட்டக்காரர்கள். கடைசி நாளன்று தொடக்கத்தில் இங்கிலாந்து கோஷ்டி 298 ரன்கள் பின்தங்கி இருந்தது. வெற்றிக்கான சாத்தியக் கூறுகள் நியூஸிலாந்துக்கு நிரம்ப இருந்தும்கூட ஃப்ளெட்சர் அபாரமாக ஆடி ஆட்டத்தின் போக்கையே திசை திருப்பி விட்டார். மாட்ச் 'டிரா' ஆகியது. இரண்டாவது இன்னிங்ஸில் 178 ரன்களைப் போராடிப் பெற்ற ஃப்ளெட்சர், படத்தில் போலார்ட் வீசிய பந்தைச் சக்தியும் எழிலும் மிக விளங்குமாறுத் தூக்குவதைக் காணலாம்.

-பிரிட்டிஷ் தகவல் நிலையம்

---

என்னய்யா நடந்திச்சு?'' என்று கேட்டான் காத்தமுத்து.

''பெரியம்மா ஒரு தெய்வம் காத்தமுத்து. அவுங்க நடந்துக்கிட்ட விதம் என் நெஞ்சை ரொம்பத் தொட்டிடுச்சி. என்னைக் கண்டவுடனே கண்ணீரைத் துடைச்சிக்கிட்டுச் சந்தோஷமா என்னைக்கும் போல வரவேற்றுங்க. சின்ன ஐயா குழந்தைதானுங்களே. அதனுலே சில நேரம் சரியாப் புரிஞ்சுக்காம நடந்துக்கிறுங்க. நீங்க ஒண்ணும் கவலைப்படாதீங்க. நான் ஒரு தடவைக்கு ரெண்டு தடவையா எடுத்துச் சொல்லிக் காத்தமுத்து கல்யாணத்துக்கு வேண்டியதை வழக்கம் போல் செஞ்சுடறேன்னு சொன்னேன். ஆனு அவுங்க பிடிவாதமா 'இனிமே அவன்கிட்டே கேட்க வேண்டாம்'னு சொல்லிட்டாங்க. பிறகு சின்னப் பட்டுத் துணி முடிச்சை என்கிட்டே எடுத்துக் கொடுத்தாங்க. அதை அவிழ்த்துப் பார்த்தேன். அதிலே தாலி இருந்தது. எனக்குக் கைகாலெல்லாம் நடுக்கம் கண்டுடிச்சு. ஆனு அவுங்க தைரியமா 'இது என்னேட தாலி கணக்குப்பிள்ளே. மூணு பவுனுலே செஞ்சது. இதை அழிச்சு ஒரு பவுனிலே காத்தமுத்து பையன் கல்யாணத்துக்குத் தாலி செஞ்சிருங்க. மீதி ரெண்டு பவுனே வித்து அந்தப் பணத்தைக் காத்தமுத்துக்கிட்டே கல்யாணச் செலவுக்காக நான் கொடுத்ததாக வைச்சுக்கச் சொல்லிக் கொடுத்துடுங்கன்னு சொன்னுங்க. எனக்கு அழுகையே வந்துட்டுது. எதுக்கு அம்மா நீங்க இப்படிச் செய்யணும்? சின்ன ஐயாகிட்டே நீங்க கேட்டு வாங்க விரும்பலேன்னுலும் நான் என் சொந்தப் பணத்தைக் கொண்டு நீங்க செய்யச் சொல்றதை யெல்லாம் செஞ்சிடறேன். நீங்க இதை வச்சிக்குங்க அம்மான்னு அதைத் திருப்பிக் கொடுத்தேன். அவுங்க திருப்பி வாங்க உறுதியா மறுத்துட்டதோடல்லாம 'நான் சொல்றபடி நீங்க செய்வீங்களா மாட்டீங்களா?' அப்படீன்னு ரொம்பக் கடுமையாக் கேட்டுட்டாங்க. அப்புறம் நான் பதிலேதும் சொல்லாம வந்துட்டேன்'' என்று கணக்குப்பிள்ளை நடந்தது முழுவதையும் விளக்கமாகக் கூறினுர். அதைக் கேட்டுக் கொண்டிருந்த காத்தமுத்து, சிங்காரம் ஆகிய இருவரின் கண்களிலும் கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது.

''பெரியம்மா ஒரு தெய்வங்க. அவங்களுக்கு உழைக்கிறதுக்கு நாமெல்லாம் கொடுத்து வைச்சிருக்கணுங்க. பெரிய ஐயா இல்லாம அவுங்க இப்படி யெல்லாம் கஷ்டப் படறதைப் பார்த்தா...'' என்று மேலே எதுவும் சொல்ல முடியாமல் சிறு குழந்தைபோல் விசும்பி விசும்பி அழுதான் காத்தமுத்து.

''அழாதே காத்தமுத்து! அழாதே! எனக்காகப் பெரியம்மா காத்துக்கிட்டு இருப்பாங்க. இந்தத் தாலியை அவுங்ககிட்டே கொடுத்து அவுங்க கையாலே வாங்கி ஆசீர்வாதம் பெற்றுக் கொண்டு வரலாம், வா!'' என்று அழைத்தவாறு பத்தர் மடித்துத் தந்த தாலியை வாங்கிக் கொண்டு காத்தமுத்து, சிங்காரம் ஆகிய இருவரும் பின்தொடரக் கணக்குப் பிள்ளை பண்ணை வீட்டை நோக்கிச் சென்றுர்.

பூ, வாழைப்பழம், தேங்காய், வெற்றிலை பாக்கு, மஞ்சள், குங்குமம் ஆகியவற்றேடு தாலியையும் முந்நூறு ரூபாயையும் ஒரு வெள்ளித் தட்டில் வைத்துப் பெரியம்மா காத்தமுத்துவிடம் கொடுத்தார்கள்.

அவன் அதை ஆனந்தக் கண்ணீர் கரை புரண்டு கண்களினின்று வழிய வாங்கிக் கொண்டான். பிறகு அந்தத் தட்டைப் பக்கத்திலிருந்த சிங்காரத்திடம் கொடுத்துவிட்டு, ''என்னை மன்னித்துவிடுங்க அம்மா! மன்னித்துவிடுங்க. நான் அவசரப்பட்டு ஒரு தகாத காரியத்தைச் செஞ்சுட்டேன். இனிமே

எப்பவும் செய்ய மாட்டேன். மன்னித்து விடுங்க அம்மா'' என்று வேண்டிக் கொண்டவாறு பெரியம்மாவின் கால்களில் விழுந்து கதறி அழுதான்.

திகைத்துப்போன பெரியம்மா, ''என்ன காத்தமுத்து! எழுந்திரு. எதுக்காக இப்படி அழுறே? என்ன தப்பு செஞ்சுட்டே? எது செஞ்சிருந்தாலும் பரவாயில்லே. எழுந்திரு'' என்று அன்போடும், ஆதரவோடும் கூறினார்.

மெல்ல எழுந்திருந்து கண்களைத் துடைத்துக்கொண்ட காத்தமுத்து தன் மடியை அவிழ்த்து, அதிலிருந்த அறுநூறு ரூபாய் பணத்தை எடுத்து, சிங்காரத்திடமிருந்த தட்டை வாங்கி அதிலே வைத்து, ''என்னே மன்னிச்சுடுங்க அம்மா! சின்ன ஐயா என் பையனின் கல்யாணத்துக்கு வழக்கமாச் செய்யிற மரியாதையைச் செய்யலியேன்னு கோபப்பட்டு ஒரு திருட்டுச் செயலைச் செஞ்சுட்டேன். ரெண்டு மூட்டை எள்ளை எடுத்து வித்துட்டேன். அந்தப் பணத்தை இதிலே வைச்சிருக்கேங்க. இதை நீங்க வாங்கிக்கிட்டு என்னை நீங்க மன்னிச்சாத்தாம்மா என் பாவம் தீரும்'' என்று கெஞ்சி வேண்டிக் கொண்டான்.

அதைக் கேட்ட பெரியம்மா இலேசாக ஒரு புன்னகை பூத்தவண்ணம், ''காத்தமுத்து! தப்பு உன்மேலே யில்லே. எங்க மேலேதான். நாங்க சரியா நடந்துக்காத காரணத்தினாலே தான் நீயும் தவறாக நடந்திருக்கே. பரவாயில்லே. இந்தப் பணத்தையும் கல்யாணச் செலவுக்கு வச்சிக்கோ'' என்றார்.

''அப்படிச் சொல்லாதீங்க பெரியம்மா! ஏதோ தெரியாத்தனமாச் செஞ்சுட்டேன். இனிமே செய்ய மாட்டேன். நீங்க இந்தப் பணத்தை வாங்கிக்கிட்டாத்தான் என் மனசு ஆறுங்க.''

''நான் உன்னே இந்தப் பணத்தை எடுத்துக்கச் சொல்றதிலேயும் காரணமிருக்கு காத்தமுத்து. ஊரிலே யாராவது வழக்கத்துக்கு விரோதமா நடந்துக்கிட்டா பெரிய ஐயா அவுங்களுக்கு அபராதம் விதிப்பாரில்லையா? அதுபோல் சின்ன ஐயா வழக்கத்துக்கு விரோதமா நடந்துக்கிட்டதினாலே தெய்வமே பார்த்து அவனுக்கு விதித்த அபராதமாகத்தான் இதைக் கருதுகிறேன். ஆகையினாலே நாங்க அந்த அபராதத் தொகையைக் கட்டித்தான் ஆகணும். நீ இந்தப் பணத்தை எடுத்துக்கிட்டாத்தான் எங்களைத் தெய்வம் மன்னிக்கும்'' என்று கண்களில் கண்ணீர் பனிக்கக் கூறினார் பெரியம்மா.

பெரியம்மா அன்போடும், ஆசியோடும் அளித்தவற்றைப் பெற்றுக் கொண்டு, தெய்வத்தைத் தரிசித்துவிட்டுப் பிரசாதத்தை வாங்கிச் செல்லும் பக்தனைப் போல் தன் வீட்டை நோக்கிச் சிங்காரத்தோடு சென்றான் காத்தமுத்து.

# கயிறு அறுந்தாலும் கதை பிழைத்தது!

ஆண்டுதோறும் கதீட்ரல் சாலையிலுள்ள தோட்டக் கலை சங்கத்தில் மலர்க் கண்காட்சி நடக்கும். அப்போது நாடகங்களும் உண்டு. ஒருமுறை 'காசி யாத்திரை' நாடகம் நடந்தது.

முத்துவேல் ஸ்டேஜ் குழுவினர் தயாரித்த முழுநீள நகைச்சுவை நாடகம்.

நாடகப் பாத்திரங்களில் முக்கியமானவர் பிரம்மசாரி பரமசிவம் பிள்ளை. வாழ்வின் லட்சியம் பிரம்மசரியமே என்று பிரசாரம் செய்பவருங்கூட!

பரமசிவமாக ஐ. என். ஆரும், அவர் வீட்டில் சமையல் வேலைக்குச் சேரும் சங்கரனாகக் கருளிராஜனும் நடித்தார்கள்.

ஒரு காதல் கடிதம் தபால் மூலம் பரமசிவத்துக்குக் கிடைக்க, அதன் மூலம் குழப்பங்களும், கூடவே நாடகக் கதையும் வளர்கிறது.

பரமசிவம் பிள்ளை நாடக நடிகை ஆண்டாளின் வீட்டுக்கு வந்துவிட்டுப் போகிறார்.

இதைச் சமையல்கார சங்கரன் பார்த்துவிட்டு அவர் காதலை அம்பலப்படுத்திவிடுகிறான். அவமானம் தாங்காமல் பரமசிவம் பிள்ளை தூக்குப் போட்டுக்கொள்ள முற்படுகிறார். தூக்குக் கயிற்றில் தொங்குவதற்குத் தயாராகும் போதுதான் அனைவரும் வருகிறார்கள். அவரைச் சாவிலிருந்து மீட்கப் பார்ப்பார்கள்.

''ஐயோ!.... இப்படி அவமானப்பட வைச்சுட்டாங்களே இனி சாவுதான் எனக்கு நிம்மதி தரும்!....'' என்றவாறு அன்று தூக்குமேடையின் மீதிருந்த ஐ.என்.ஆர். பல்வேறு நாடகப் பாத்திரங்களும் முயன்று ''நீங்க தூக்குப் போட்டுக்கொள்ள வேணாம்!'' என்று தடுத்தனர்.



''முடியாது. என் முடிவை மாற்றிக்கொள்ள மாட்டேன்!'' என்றபடி தூக்குக் கயிற்றைக் கழுத்தில் மாட்டிக் கொள்ள முயலும்போது, மேலே குறுக்குக் கட்டையில் கட்டப்பட்டிருந்த தூக்குக் கயிறு 'பசக்' என அறுந்து விழுந்தது!

ஒரு விநாடி எல்லோரும் திகைத்து நிற்க, ''பார்த்தீங்களா! நீங்கள் சாகறதை நாங்க மட்டும் தடுக்கல்லே.... இந்தத் தூக்குக் கயிறே தடுக்கிறது

## நாடகத்துக்குள் ஒரு நாடகம்

பாருங்க!.... இல்லாட்டா அறுந்து விழுமா?'' என்று சமயோசிதமாக ஒரு வசனத்தைச் சொல்லிவிட்டார் சங்கரனாக நடித்த கருளிராஜன்.

குழப்பத்துடன் நாடக மேடையின் மீதிருந்த நடிகர்கள் முகத்தில் மகிழ்ச்சி பொங்கியது.

எதிர்பாராத சம்பவமும் எதிர்பாராத நாடக நிகழ்ச்சியாகச் சேர்ந்து நாடகத்தை நிறைவு செய்துவிட்டது!

-சிவபாலன்



எந்த ஒரு நாணயத்துக்கும் மறு பக்கம் உண்டு. 'பூ'வாகவே விழுந்து கொண்டிருக்கும்போது திடீரென்று ஒரு சமயம் 'தலை' விழுந்தால்?



# மின்னல் ஸ்டிரைக் முடிந்த விதம்!

-சுபஸ்ரீ-

சென்ட்ரல் ஸ்டேஷனில் மூட்டை முடிச்சுக்களுடன் இறங்கிய ரயில் பிரயாணி ஒருவர் வீட்டுக்குப் போக ஒரு டாக்ஸியைக் கெஞ்சிக் கேட்டு அமர்த்திக் கொண்டார். பார்த்தசாரதி கோயில் போய்ச் சேர, பாரெல்லாம் சுற்றி வளைத்து லக்கேஜ் உள்பட ரூபாய் எட்டு டிரைவர் கேட்டதை ஒருவாறு ஜீரணித்துக் கொண்டு, தயக்கத்துடன் பிரயாணி பத்து ரூபாய் நோட்டை எடுத்துக் கொடுக்க, 'சில்லறை இல்லாத சாவு கிராக்கி' என்று காக்கி உடை சாரதி தூக்கி எறிந்து பேச, பிடித்தது அனர்த்தம்.

அவ்வளவு தான்; நகர் முழுவதும் டாக்ஸி பிரயாணிகள் மின்னல் ஸ்டிரைக் செய்தனர். தப்பித் தவறி ஒரு பயணிகூட மஞ்சள் தலை வாகனத்தைத் தஞ்சமடையவில்லை. ரயில் பிரயாணிகள் ஜட்கா தேடினர்; முதல்வர் பிறந்த நாள் பரிசு வாகனங்களுக்கு அடித்தது யோகம்.

அன்று ஒரு டாக்ஸியில் மீட்டர் கொடி சிரசாசனம் போட வேண்டுமே! ஊஹூம்.... டாக்ஸி டிரைவர்கள் பஸ் ஸ்டாண்டுக்கு அருகே ஊர்ந்து கவனத்தை ஈர்க்கும் பிடிவாதமாக ஒரு கிராக்கிகூடத் திரும்பிப் பார்க்கவில்லை. பேபிகள் மூலைக்கு மூலை கவனிப்பாரற்ற அனாதைக் குழந்தைகள் போல் கிடந்தன.

வாரி செய்வோர்
வர் போலீஸ்

கமிஷனரைச் சந்தித்து டாக்ஸி செலுத்துவோர் பிரயாணிகளுக்கு மரியாதை செலுத்தாவிட்டால் பகிஷ்காரம் தொடரும் என விளக்கினர். டாக்ஸி ஓட்டிகள் சங்கத் தலைவர் டெபுடி டிராபிக் கமிஷனரைச் சந்தித்துத் தங்கள் கஷ்டங்களை முறையிட்டார். இரு கட்சிகளுக்கும் இரு காதுகளைத் தந்த போலீஸ் ஒரு சமரஸ உடன்படிக்கைக்கு முயன்று கொண்டிருந்தனர்.

பிரசவ ஆஸ்பத்திரியில் தம் மனைவியைச் சேர்ப்பதற்கு அன்று சில ரூபாய்கள் சம்பாதிக்க நினைத்த ஒரு டிரைவர் இந்தப் பயணிகள் ஸ்டிரைக்கினால் மிகவும் பாதிக்கப்பட்டார். தமது பையனைக் கல்லூரியில் சேர்க்கக் குறைந்த பத்து ரூபாயை விரைந்து சேகரிக்க நினைத்த டிரைவர் வருமானமின்றி வாடினார். அன்றைய நாஸ்தாவுக்கு வழியில்லாத சில கார் ஓட்டிகள் ஈ ஓட்டிக் கொண்டிருந்தனர்.

இரண்டாம் நாள் நிலைமை நீடிக்கவே, அன்பழகன் எம். எல். ஏ. தலையிட்டு நடத்திய பேச்சு முதல் வெயிலே ஊர்ந்து, இறுதியில் டிக்கிக்குள் முடங்கிய பெட்டி போல் அடங்கிவிட்டது. போக்குவரத்து மந்திரி தமது வெளியூர்ப் பயணத்தை ரத்து செய்து விட்டு, ஒழுங்கற்ற மீட்டர் உடைய டாக்ஸியில் உட்கார்ந்த பயணியின் கவலையுடன், காத்திருந்தார்.

'டாக்ஸியில் ஏற மறுக்கும் பயணிகளைப் போலீஸ் இழுத்து சார்ஜ் செய்யக்கூடாதா?' என்ற நிருபர் கேள்விக்கு ஓர் அதிகாரி சிரித்தபடி 'நாங்கள் அதிக நடவடிக்கை எடுத்தால் அது ஒரு லா அண்ட் ஆர்டர் பிரச்னையாக மாறி விடும்' என்று கூறினார்.

முதல்வர் தலையிட்டதால் டாக்ஸி பயணிகள் சங்கத் தலைவர் கொடியைத் தாழ்த்தினார். இனி டாக்ஸி டிரைவர்கள் திடீர் ஸ்டிரைக் செய்து நடு வழியில் பிரயாணிகளை அம்போ என்று விடுவதில்லை என்ற வாக்கு; போக்குவரத்துக்குத் தடையாக ஊர்திகளை நிறுத்துவதில்லை என்ற உறுதி ஆகியவற்றை அளித்ததுடன் டாக்ஸி டிரைவர்களுக்குப் பண்பாடு பழகத் தமிழ்ச் சொற்கள் வகுப்பை சென்ட்ரல் தமிழ் இன்ஸ்டிட்யூட் மூலம் நடத்தவும் டாக்ஸி யூனியன் ஒப்புக் கொண்டது.

பாதசாரிகள் மீண்டும் டாக்ஸி சவாரிகள் ஆனார்கள்!



ஜி.பி.ஓ. வாசலில் நின்று கொண்டிருந்த ரகு அவளைப் பார்த்ததும் திகைத்துவிட்டான். படிகளில் அன்னமெனச் சரசர என்று வழிந்து வந்து கொண்டிருந்த அவள்...... அவள்தானா?

படி நுனிக்கு வந்த அவள் தன் கூலிங் கிளாஸைக் கழற்றிவிட்டுக் காத்திருந்த காரினுள் ஏறினாள். கிளாஸைக் கழற்றியதும் அவனுக்கு நன்றாக அடையாளம் புரிந்துவிட்டது. அவளேதான்....

மறு கணம், ''ஹேய்.... மிஸ்.... மிஸ்... மிஸ்...உங்களைத்தானே!'' என்று கதறியபடி அவள் காரை நோக்கித் தாவினான் அவன்.

ஆனால் அதற்குள் அவள் காரினுள் ஏறி அமர்ந்து ஸ்டார்ட் செய்துவிடவே, அந்த ஹெரால்ட் 'புர்ர்ர்ர்ர்....' என்று போயே போய்விட்டது. அதற்கு விட்டுவிடுவானா ரகு? தன் விடாமுயற்சியைக் காட்டப் பத்தடி ஓடினான். பிறகு நின்று திரும்பி ஸ்கூட்டர் ஸ்டாண்டுக்குப் பறந்து தன்னுடைய அதி அற்புதமான லாம்ப்ரெட்டாவைக் கிளப்பிக் கொண்டு ஹெரால்டைத் துரத்தினான்.

ஹெரால்ட் பாரீஸ் கார்னரைப் படுவேகமாய்க் கடந்து அண்டர்கிரவுண்டு பாதையில் இறங்கிக் கடற்கரையை நோக்கிப் பாய்ந்துவிட்டது. அவள் சந்திரனுக்குத்தான் போகட்டுமே, ரகுவிடமிருந்து அவள் தப்பிவிட முடியுமா? வேகத்தை அதிகப்படுத்தினான்.

இந்த ஸ்கூட்டர்களுக்கே 'மூளை' கிடையாது. ரகுவின் அவசரம், தவிப்பு அதற்குப் புரியவில்லை. பாரீஸ் கார்னரை அடைவதற்குள் 'படக்'கென்று தன் உயிரை விட்டுவிட்டு நின்றுவிட்டது! ரகுவுக்கு வந்த ஆத்திரத்தில் 'படார் படார்' என்று உதைத்துப் பார்த்தான். ம்...ம்.... கிளப்புவேனா என்று அடம் பிடித்தது அது. அதன் பேரில் தப்பே இல்லை. ரொம்பப் புது ஸ்கூட்டர் அது — அதாவது இருபது வருஷங்களுக்கு முன்பு! இப்பொழுது அதை நொந்து என்ன பயன்?



# மை டியர் மைசூர் மகாராஜா!

-கேசி-

பெருமூச்சுடன் பார்த்தான் ரகு. தூரத்தில் அந்த ஹெரால்டு கார் பறந்து கொண்டிருந்தது. ''நல்ல வேளை, நம்பரைப் பார்த்துக் கொண்டேன்.....நாளையே பிடித்து விடமாட்டேனா, அவளை'' என்று முனகியபடி தன் விதியை நொந்தபடி வெறுப்புடன் ஸ்கூட்டரை இழுத்துக் கொண்டு, இல்லை, தள்ளிக் கொண்டு நடந்தான் ரகு!

அந்த ஹெரால்டு மோகினி யார், அவளைப் பார்த்ததும் நமது இளம் கதாநாயகன் பொங்கி எழுவானேன், அவளைத் துரத்துவானேன்? அதற்குக் காரணம் இருந்தது.

ஏறத்தாழ இருபது நாட்களுக்கு முன்பு எழும்பூர் ஸ்டேஷனில் நடந்த நிகழ்ச்சி இன்னும் பச்சையாய், இல்லை, இல்லை, சிவப்பாய், அவன் நெஞ்சில், ஸ்லாக்கில் இருக்கிறது!

எழும்பூர் ரயில்வே ஸ்டேஷன்....

அன்று ரகுவின் மானேஜரை வழியனுப்ப வந்த ரகு அமர்க்களமாக வொயிட் டெரிகாட் ஸ்லாக், வொயிட் பாண்டில் மின்னினான். வழியில் நாலு பேர் நம்மைத் திரும்பிப் பார்த்தால் இலேசாய்த் தலையில் ஒரு கனம் வருவது சகஜம். வெள்ளை வெளேர் என்று டிரஸ் செய்து கொண்டால் நாலு பேருக்கு நாற்பது பேராகப் பார்ப்பது அதைவிட சகஜம்! ரகுவுக்குக் கேட்க வேண்டுமா? தான் தான் மன்மதனின் மறு அவதாரம் என்று மகா கனத்தோடு ஒவ்வொரு பெட்டியாய் நோட்டம் விட்டபடி ஜன்னலோரமாய் நடந்து கொண்டிருந்தான்.

வாழ்க்கையின் சுவையே அடுத்த வினாடி என்ன நடக்கப் போகிறது என்று தெரியாத சஸ்பென்ஸ்தான். அந்த முதல் வினாடி வரை எங்கோ வானுலகில் சஞ்சாரம் செய்து கொண்டிருந்த ரகு, அடுத்த வினாடி தன் முகத்தில் யாரோ பத்து பக்கெட் தண்ணீரைப் படீரென்று அடித்து அபிஷேகம் செய்வது போல் உணர்ந்தான். பத்து கணங்கள் அப்படியே அசைவற்று நின்றுவிட்டான். பின்பு சுதாரித்துக் கொண்டு பார்த்த பொழுது செக்கச் செவேல் என்று ஆரத்தியைக் கரைத்து அவன் மேல் கொட்டியது போல் செம்மை நிறத் திரவ பதார்த்தம் ஒன்று அவன் முகத்தில் மோதி வழிந்து மேல் ஸ்லாக்கு மார்க்கமாய்ப் பேண்டையும் நனைத்துக் கொண்டு கீழே சொட்டிக் கொண்டிருந்தது!

விஷயம் வேறொன்றுமில்லை. யாரோ பெட்டியினுள்ளிருந்து வெற்றிலை போட்டுக் கொண்டு வெளியே உமிழ்ந்திருக்கிறார்கள்!

கோபம் என்ற உணர்ச்சி வந்தால் ஒவ்வொருவர் ஒவ்வொரு விதமாக நடந்துகொள்வார்கள். ரகுவுக்கு வந்த கோபம், பத்தாயிரம் ஓநாய்கள், இருபதினாயிரம் புலிகள் ஆகியவை பத்து நாள் கொலைப் பட்டினிக்குப் பிறகு எப்படி இரைக்கு அலைந்து உறுமுமோ, அதுபோன்று இனம் புரியாத சத்தங்களாய் அவன் வாயாலும் மூக்காலும் வெளிப்பட்டன!

அந்தப் பெட்டியினுள் அவன் எட்டிப் பார்த்தான்.

உள்ளே —

அசடு ஒருபுறமும் வெற்றிலைச் சாறு இன்னொருபுறமும் ஒழுகப் பேந்தப் பேந்த



விழித்துக் கொண்டு கிழவர் ஒருவர் உட்கார்ந்து கொண்டிருந்தார். அவருக்கு அருகே கையைப் பிசைந்து கொண்டு மாசு மறுவற்ற மலர் முகத்தில் கலவரம் படரத் தன் கரிய பெரிய உருண்டையான விழிகளில் பீதி மிளிர அமர்ந்திருந்தாள் அவள். அவளுடைய அழகைக் கண்டு தன் கோபத்தைத் தணித்துக் கொண்டு சரண் அடையத் தயாராய் இல்லை அவன். அவள் அழகாய் இருந்தால் ரகுவுக்கு என்ன?

தன் ஆத்திரம் அடங்கும் மட்டும், அந்தக் கிழவரது பரம்பரையையும், அவரது மடத்தனத்தையும், அவரது அங்க லக்ஷணங்களையும் அவருக்குப் பிறவியிலேயே மூளை இல்லை என்பதையும் தனது எக்ஸ்ரே கண்களால் கண்டு நிமிஷத்துக்குத் தொள்ளாயிரம் வார்த்தைகள் வேகத்தில் விளாசித் தள்ளிக் கொண்டிருந்தான் ரகு!

அந்த மங்கை மடவன்னம் முத்துப் பல் காட்டிக் கைகூப்பிப் பத்தாயிரம் 'சாரி'கள் சொல்லி விட்டாள். அப்படியும் ரகுவின் சினம் அடங்கியபாடில்லை.

அதற்குள் கூட்டத்துக்குக் கேட்க வேண்டுமா ? அந்தப் பெட்டியைச் சூழ்ந்துகொண்டு பலர் ரகுவை உற்சாகப்படுத்தினார்கள். சிலர் அந்தக் கிழவருக்கும் பெண்ணுக்கும் பரிந்து பேசினார்கள்.

ரகு தன் ஆபீஸ் மானேஜரை வழி அனுப்ப வந்திருக்கிறோம் என்பதையே மறந்தான். எப்படியும் அந்தப் பெட்டிக்குள் ஜன்னல் வழியாகவாவது தாவி ஏறி, அசல் பைத்தியம் போல் விழித்துக் கொண்டிருந்த அந்தக் கிழவரை ஆசை தீர நாலு வாங்கு வாங்கினால்தான் தனக்கு ஏற்பட்ட அவமானம் தீரும் போலிருந்தது அவனுக்கு.

''வெற்றிலைச் சீவல் போடறவங்க வெளியிலே பார்த்துத் துப்பணும். சார்... அது தெரியாதவங்க வெற்றிலை சீவலே போடக் கூடாது..... தெரியுமா ?'' என்று உறுமினான் ரகு.

அவன் அந்தக் கிழவருக்காகப் பதில் சொன்னாள் இப்போது:

''பார்த்துத்தான் சார், துப்பினார்!''

தமிழ் மொழியின் மேன்மையைப் பற்றியும் அது எவ்வளவு பொருள் நயங்களுக்கு இடம் தரக் கூடியது என்பதைப் பற்றியும் எவ்வளவோ மகா அறிவாளிகள் சொல்லியிருக்கிறார்கள்.

ரகுவுக்கு ஓரளவு தமிழறிவு உண்டு.

'' என்ன பார்த்துத்தான் துப்பினாரா ? நான் வருவதைப் பார்த்து வேண்டுமென்றே துப்பினாரா ? ஏய், மொட்டைக் கிழவா ! உனக்கு அவ்வளவு திமிரா?'' என்று ரகு ஜன்னல் வழியாகவே உள்ளே பாய்ந்தான்.

''பார்த்தீர்களா பெரியப்பா.... நான் அப்போதே சொன்னேன், கேட்டீங்களா?'' என்று அந்த ஒய்யாரி அலற, ஸ்டேஷனில் பிளாட்பாரத்தில் கூடியிருந்த அனைவரும் ரகுவைப் பிடித்துப் பின்னால் இழுக்க 'கூ'வென்று கூவியபடி ரயில் புறப்பட்டு நகர்ந்தது.

ரகு என்ன முண்டியும் நடக்கவில்லை. கூட்டத்தினர் அவனை அவ்வளவு இறுக்கமாய்ப் பிடித்துக் கொண்டிருந்தனர். ஒரு வழியாய் அந்த வண்டி தாம்பரம் போய்ச் சேர்ந்தது என்று கண்ட்ரோலில் விசாரித்துத் தெரிந்து கொண்ட பிறகுதான் அவனை விடுவித்தார்கள்.

இப்போது ஹெரால்டில் பறந்தாளே அவளேதான் இவள், அல்லது இவளேதான் அவள். அன்று வீட்டுக்கு வந்த ரகு அந்தக் கறை படிந்த ஸ்லாக்கையும் பாண்ட்டையும் லாண்டிரிக்குப் போடவேயில்லை. என்றாவது அவள் விலாசத்தைக் கண்டுபிடித்து அதே உடையைப் போட்டுக் கொண்டு போய் அவள் வீட்டில் ரகளை செய்யாவிட்டால் தன் பெயர் ரகு இல்லை என்று சூளுரைத்துக் கொண்டிருந்தான் அவன்.

மறுநாள் மத்தியானம் வரை டிராபிக் கமிஷனர் ஆபீஸ் வாசலில் பழி கிடந்து அந்த ஹெரால்ட் காரின் விலாசத்தைக் கண்டு பிடித்துக் கொண்டான் ரகு.

ராஜா அண்ணாமலைபுரத்தில் இருந்தது அந்தப் பங்களா. மாலை மயங்கும்வரை காத்திருந்தான் அவன். பிறகு அதே உடையை மாட்டிக்கொண்டு ராஜா அண்ணாமலைபுரத்தில் அந்தக் கிராஸ் தெருவைக் கண்டுபிடிக்க ஏறத்தாழ ஆறு காலன் (பழைய கணக்கு) பெட்ரோல் தீர்ந்து விட்டது. ஸ்கூட்டரைத் தள்ளிக்கொண்டு ஒரு சந்தில் புகுந்தான்.

எதிரே—

ஒரு விளக்குக் கம்பத்தின் அடியில் நின்று கொண்டு உள்ளங்கையை அடிக்கடி குனிந்து உற்றுப் பார்த்துவிட்டு எதையோ புலம்பிக் கொண்டு நின்றிருந்த அந்த உருவம்—

ஹா... அவரேதான்... அந்தக் கிழமே தான். ரயிலிலிருந்து அவன் மேல் வெற்றிலைச் சாற்றை உமிழ்ந்த அவரேதான்!

இவர் ஏன் இங்கு நிற்கிறார்?

''அஹ்ஹா ஹா ஹா! அகப்பட்டுக்கொண்டான் தனியாய். ஏய், கிழவா! உன் இஷ்ட தெய்வங்களை வேண்டிக்கொள். நீ இப்போது என்னிடம் வசமாகச் சிக்கிக் கொண்டு விட்டாய்!'' என்றபடி அவரை நோக்கி முன்னேறிய ரகுவுக்குத் திடீரென்று ஒரு சந்தேகம். இவன் ஏதாவது ஏடாகூடமாய் அவர் மேல் கைவைக்க, கிழம் 'பொட்'டென்று உயிரை விட்டு வைத்தது என்றால் அவன் கதி என்ன?

'அண்ணாமலைபுரத்தில் கோரக் கொலை !

ஸ்கூட்டரில் வந்த கொலைகாரன்!

கழுத்தை 'மளுக் மளுக்'கென்று முறித்துக் கொலை!

வாலிபர் ரகு போலீஸில் சரண்!'

இப்படி ஏகப்பட்ட ஆச்சரியக் குறிகளோடு மறுநாள் பத்திரிகையில் செய்தி வந்தாலும் ஆச்சரியம் இல்லை அல்லவா?

ஆகவே சடக்கென்று தன் எண்ணத்தை மாற்றிக்கொண்டான். இவரிடம் நைஸாகப் பேசி வீட்டைக் கண்டுபிடித்த பிறகு அவன், அந்த ஹெரால்ட் கார், மோகினி, அவளிடம் பேசிக் கொள்வோம் என்று அவர் அருகில் நெருங்கினான் ரகு.

நன்றாக இருட்டி விட்டது அப்போது. கார்ப்பொரேஷன் விளக்கு ஏதோ வெளிச்சம் என்ற பேரில் எதையோ இலேசாய் வீசிக் கொண்டிருந்தது.

மெதுவாய் அவரை அணுகினான் ரகு.

"ஹி... ஹி... வணக்கம் சார்... உங்க வீடு எங்கே, இங்கேதானா?" என்றான்.

மறு விநாடி அவர் போட்ட கூச்சல் அவனைத் தூக்கி வாரிப் போட்டது. அவர் வீடு எங்கே என்று கேட்டால் ஏன் இப்படிச் சப்தம் போடுகிறார் என்று புரியவில்லை அவனுக்கு.

"மானம் போச்சு. மரியாதை போச்சு. எப்போ கவர்மெண்டிலே என் பர்ஸை—பிரிவி பர்ஸைக் கொள்ளை அடிச்சானுங்களோ அப்பவே போயிடுத்து... எல்லாம் போயிடுத்து... டேய்... வீடுன்னுடா சொன்னே? வீடு? அதோ தெரியறதே அது வீடாடா? அரண்மனைடா... அரண்மனை... என் சொந்தப் பாலஸ். நான் யார் தெரியுமா? மைசூர் மகாராஜா தெரியுமா? இது என்ன தெரியுமா? 500 காரட் புளு ஜாக்கர் வைரம். கோஹினூர் இதுகிட்ட என்ன பண்ணும்? பெர்ஷியாவிலேருந்து ஒரு ரத்தின வியாபாரி வந்தான். பத்துக் கோடி ரூபாய் கேட்டான். என்னிடம் நடக்குமோ? பயலைப் பயமுறுத்தி வாங்கிப்பிட்டேன். எப்படி இருக்கு? பார்த்துச் சொல்லு" என்று ஒரு பெரிய எக்காளச் சிரிப்புடன் ரகுவின் கையில் எதையோ கொடுத்தார் அந்தக் கிழவர்.

ரகு அதை வாங்கி உற்றுப் பார்த்தான். சாளேசுவரம் உள்ளவர்களுக்குக் கூட அது நன்றாகத் தெரியும், கூழாங்கல் என்று.

அவனுக்குத் தலையைச் சுற்றியது. கையை வெடுக்கென்று கடித்துப் பார்த்துக்கொண்டான். மகாப் பிரமாதமாக வலித்தது. சரி, சுயநினைவுடன்தான் இருக்கிறோம் என்ற முடிவுக்கு வந்தான். இது என்ன இந்தக் கிழம் மைசூர் மகாராஜா, அரண்மனை, வைரம் என்கிறது என்று அவனுக்குத் தலை கால் புரிபடவில்லை. 'ஆல்ரைட். இது ஃப்ரீ இண்டியா. அவருக்கு என்னவோ மைசூர் மகாராஜாவாக இருக்க வேண்டும் போல் ஆசை! இருந்துவிட்டுப் போகட்டுமே. அதனால் என்ன' என்று எண்ணியவனாய் அவரை நோக்கிப் புன்னகை புரிந்தபடி, "மன்னிக்கணும். தவறாகச் சொல்லிவிட்டேன். நீங்கள்தான் மைசூர் மகாராஜா. அடேடே... இப்போது நன்றாகத் தெரிகிறது. ஏன் அரண்மனையை விட்டு வெளியே வந்துவிட்டீர்கள்? ஓ! உள்ளே காற்று சரியாக வரவில்லையோ? நான் யார் தெரியுமோ?" என்று கேட்டான்.

"தெரியவில்லையே!"

"ஸ்வாதித் திருநாள் என்று திருவாங்கூர் சமஸ்தானத்தில் கேள்விப்பட்டிருக்கிறீர்களா?"

"ஓ! ஆமாம், ஆமாம். நன்றாக நினைவுக்கு வருகிறது. உங்களைப் பற்றியும் உங்கள் பாட்டுக்களையும் நான் அடிக்கடி கேட்டிருக்கிறேன். அடாடா என்ன பாட்டு, என்ன கீர்த்தனை!"

"மன்னிக்கணும். நான் ஸ்வாதித் திருநாள் மகாராஜா இல்லை. அவருடைய மூன்றுவது பெண் வயிற்றுப் பேரன். ஆனால் நானும் பாட்டுக்கள் போட்டிருக்கிறேன். மியூஸிக் டைரக்டராக இருக்கிறேன். என் லேட்டஸ்ட் ஹிட் ஸாங் என்ன தெரியுமா? 'அடி என்னடி பொன்னம்மா... புன்னைக்கு... என் நெஞ்சு மங்குதடி... பிப்பி... பிப்பிபிபி...பிப்பிப்பி' எப்படி?" என்றபடி நைஸாக நழுவ ஆரம்பித்தான் ரகு.

ரேகா　ஆனந்த் பய் — ராம் வாரீகர்










பைத்தியங்களின் அமானுஷ்ய சக்தியைப் பற்றி ஓரளவு அவனுக்குத் தெரியும். இத னிடம் மாட்டிக் கொண்டு அநாவசிய மாய் அவஸ்தைப்படுவானேன் என்று அவ ருக்குத் தோதாகப் பேசிவிட்டுத் தப்பிக்கப் பார்த்தான்.

பத்துத் தப்படி வேகமாக எடுத்து வைத்த வன் ஓட்டத்தைத் துரிதப்படுத்தினான். ஆனால் மைசூர் மகாராஜாவுக்குச் 'சொரேர்' என் றது. தன் கண்ணெதிரில் திருவாங்கூர் மகா ராஜாவின் பரம்பரை வைரத்தோடு ஓடு வதைப் பார்த்துக் கொண்டு நிற்பாரா?

''ஹா! வைரம்! என் வைரம்! திருடன்! திருடன்!!'' என்று பலமாகக் கூச்சலிட்ட படி அவனைத் துரத்த ஆரம்பித்தார். அப் பொழுதுதான் ரகுவுக்குப் புரிந்தது, அவர் கொடுத்த கூழாங்கல்லையும் எடுத்துக்கொண்டு ஓடுகிறோம் என்று. அந்தக் கிழம் இவ்வளவு வேகமாகத் துரத்தும் என்று எதிர்பார்க்க வில்லை அவன்.

இப்பொழுது உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு ஓடினான் அவன். பைத்தியத்திடம் சிக்கிவிட்டால் அவன் கதி?

எதிரே 'மைசூர் மகாராஜா'வின் அரண் மனைதான்! திறந்து கிடந்தது. யோசிக்க வில்லை. விருட்டென்று உள்ளே புகுந்துவிட் டான். கிழவரும் விடவில்லை. அவரும் உள்ளே புகுந்து விட்டார்.

மறு விநாடி....

தன் கையிலிருந்த கூழாங்கல்லைப் பலம் கொண்ட மட்டும் அவரை நோக்கி வீசிவிட்டு விருட்டென்று பக்கத்துத் தோட்டத்தினுள் மறைந்தான் ரகு.

தான் வீசிய கல் இவ்வளவு குறி தவறாமல் தன் வேலையைச் செய்யும் என்று ரகுவே எதிர்பார்த்திருக்க முடியாது. அந்தக் கல் சரியாக மைசூர் மகாராஜாவின் மண்டை யைப் பதம் பார்க்க அவர் ''ஹா! ஐயோ!'' என்று ரத்தம் ஆறாகப் பெருக்கெடுத்தோடக் கீழே சாய்ந்தார்.

இந்தச் சத்தத்தைக் கேட்டுப் பங்களாவி லிருந்து பலர் தபதபவென்று ஓடிவந்தனர்.

''அடேடே பெரிய ஐயா!'' என்று வேலைக்காரர்கள் கூப்பாடு போட, ''பெரி யப்பா! பெரியப்பா! இத்தனை நாள் எங்கே பெரியப்பா போயிட்டீங்க! உங்களை இப்படி அடிச்சது யாரு பெரியப்பா!'' என்று அவள்— அந்த ஹெரால்ட் கார்க்காரி அழுவதும், ஒளிந்துகொள்ளத் தோட்டத்தில் இடம் தேடிக் கொண்டிருந்த ரகுவின் காதுகளில் மங்கலாக விழுந்தன.

தோட்டத்தில் ஒதுக்குப்புறமாய் மூலையில் திரும்பியிருப்பான். அவன் பின் மண்டையில் ஏதோ தாக்கியது போலிருந்தது. அவன் கண்ணெதிரே லட்சக்கணக்கான மின்மினிப் பூச்சிகள் பறந்தன.

'ஹா... நம்பகிட்டத் தப்பிக்க முடியுமா?' என்று யாரோ வெற்றிக் கூக்குரலிடுவது, நினைவு தப்பிக் கொண்டிருந்த அவன் காது களில் மங்கலாகக் கேட்டது.

ரகு மெதுவாக ஓரக் கண்களைப் பிரித்துப் பார்த்தான். சுகமாய் மெத்தையில் கட்டிலில் படுத்திருப்பதையும், அறையினுள் காலை இளங் கதிரவனின் ஒளி படருவதையும் ரசிக் கும் நிலையில் இல்லை அவன். அவன் தலை 'விண் விண்' என்று தெறித்துக் கொண் டிருந்தது. யாரோ கட்டு ஒன்று போட் டிருந்தார்கள்.

அறையினுள் அவள் நுழைந்தாள். சட் டென்று கண்களை மூடிக்கொண்டான் அவன்.

''சார்...சார்.... அடி பலமா?'' என்று கட்டிலை அசைத்தபடி கேட்டாள் அவள்.

குழல், யாழ், சித்தார் எல்லாம் சேர்ந்து குழைந்தன அவள் குரலில்.

''சார்... உங்களைத்தானே!'' என்று மறு படியும் உலுக்கினாள் அவள்.

விருட்டென்று எழுந்தான் ரகு.

''ஆமாம் மேடம்... அடி பலம்தான். ரொம்பப் பலம்தான். உங்கள் பரம்பரையின் போக்கே நன்றாயிருக்கிறது. அன்று ஸ்டேஷ னில் வெற்றிலைச் சாறு அபிஷேகம், இன்று வீடு தேடி வந்தவனைக் குண்டர்களை ஏவித் தாக்கச் செய்தல்... இன்னும் இங்கே இருந் தால் என்ன என்ன செய்வீங்களோ!''

''மிஸ்டர்! ரொம்ப ஓட்ட வேண்டாம். இந்தப் பங்களாவில் அத்துமீறி நுழைந்திருக் கிறீர்கள். என் பெரியப்பாவைக் கல்லெறிந்து படுகாயத்துக்கு உள்ளாக்கி அவரை ஆஸ் பத்திரியில் அட்மிட் செய்யும்படி செய்திருக் கிறீர்கள். அன்று ஸ்டேஷனில் எத்தனையோ முறை கெஞ்சி மன்னிப்புக் கேட்டும் மனம் இளகாத நீர், பெண்ணென்றால் பேயும் இரங்கும் என்பார்களே, அதனினும் மிகப் பெரிய பேய்!'' என்று பொரிந்து கொட்டி னாள் அவள்.

''ஏய்!'' என்று பாயப் போனவனைத் தடுத்து நிறுத்தியது அந்த அறையின் மூலையில் ஒலிக்க ஆரம்பித்த டெலிபோன்.

''ஹலோ!'' என்று வெறுப்புடன் பேச ஆரம்பித்த சில விநாடிகளில் அவள் முகம் பிரகாசம் அடைந்தது. ''இஸ் இட்... அப் படியா?'' என்று ஆச்சரியத்துடன் கூறியவள் ''இன்னும் சற்று நேரத்தில் வருகிறேன்'' என்றபடி போனை வைத்துவிட்டுத் தாவி ஓடி வந்தாள் அவனிடம்.

ரகு கட்டிலில் அமர்ந்து வெறுப்புடன் கண்களை இறுக மூடிக் கொண்டான்.

''சார்... மிஸ்டர்.... ஐ யாம் ரியலி சாரி'' என்று குழைந்தாள் அவள்.

''சாரியா... எதற்குச் சாரி?''

''உங்களைப் 'பேய்', 'பேயினும் கேடு கெட்ட பெரிய பேய்' என்றெல்லாம் சற்று முன்பு திட்டிவிட்டேன். அதற்குத்தான் சாரி என்றேன்.''

''முதலில் திட்டிவிடுவது. பிறகு இருக்கவே இருக்கிறது 'சாரி' இப்படித்தானே?''

''இல்லை. நிஜமாகவே சாரி ஸார். நீங்கள் பேய் இல்லை; எங்கள் குடும்பத்தை, என் பெரியப்பாவைக் காப்பாற்றிய ஏஞ்ஜல்... தேவதூதன்...''

''ஐயையோ! இது என்ன, ஏதாவது சினிமா ஷூட்டிங்கா? என்னென்னவோ டயலாக் எல்லாம் பேசறீங்களே!''

''நோ... நோ... சினிமா டயலாக் இல்லே. என் இதயத்திலிருந்து பொங்கி வரும் வார்த்தைகள் இவை.''

''ஓ! இதயம் வேறே இருக்கிறதா உங்களுக்கு!''

''சார்... சார்..! மறுபடியும் என் வாயைக் கிளறுகிறீர்கள். விஷயத்தைச் சொல்லி விடுகிறேன். என் பெரியப்பா மைசூரில் பெரிய வைர வியாபாரி. அரண்மனை அருகே கடை. மகாராஜா குடும்பத்தில் மிகவும் பரிச்சயம் உள்ளவர். போன வருஷம் திடீரென்று வியாபாரத்தில் பல லட்சக் கணக்கான ரூபாய்கள் நஷ்டம். அவருக்குப் புத்தி பேதலித்து விட்டது. எப்போது பார்த்தாலும் தாம் மைசூர் மாகாராஜா என்பதும், ஏதாவது ஒரு கல்லை வைத்துக் கொண்டு வைரம் என்று பேத்துவதும் அவருக்கு வழக்கமாகி விட்டன. அன்று உங்களை ஸ்டேஷனில் பார்த்தது கூட, அவரைத் தஞ்சாவூரில் ஒரு பெரிய சித்த வைத்தியரிடம் காட்டச் சென்று கொண்டிருக்கும்போதுதான்...! அந்த வைத்தியர் அதிர்ச்சியால் ஏற்பட்ட பைத்தியம், அதிர்ச்சியால்தான் தீரவேண்டும், வேறு மருந்தில்லை என்று கூறிவிட்டார். நேற்று மாலையிலிருந்து பெரியப்பாவைக் காணவில்லை. எங்கெங்கோ சுற்றிவிட்டு நேற்றிரவு நீங்கள் ஓட, அவர் துரத்த, நீங்கள் அவரைக் கல்லால் அடிக்க, அடி பொட்டில் பட்டு, அது அவருக்குச் சரியான அதிர்ச்சி வைத்தியமாகி, இப்பொழுது ஆஸ்பத்திரியில் நன்றாகப் பேசுகிறாராம். இப்போது வந்த 'போன்' அதுதான். அவருக்குப்புத்தி சரியாகி விட்டால் ஒரே வருஷத்தில் எவ்வளவோ சம்பாதித்து விடுவார்.''

''அவர் எவ்வளவு லட்சம் வேண்டுமானாலும் சம்பாதிக்கட்டும். முதலில் எனக்கு ரெண்டரை ரூபாயை அனுப்பிவையுங்கள்!''

''ரெண்டரை ரூபாயா? எதற்கு?''

''ஆமாம், என்னோட பாண்ட், ஸ்லாக் கைப் பாழ்பண்ணினாரே உங்க பெரியப்பா! அதை டிரை கிளீன் பண்ண சார்ஜ் ரெண்டரை ரூபாய்!''

''ஹோ...ஹோ...'' என்று அழகாகச் சிரித்தாள் அவள்.

''எவ்வளவு பெரிய காரியம் செய்திருக்கிறீர்கள். எவ்வளவு பெரிய லட்சாதிபதியின் பிசகிய மூளையை மீட்டுத் தந்திருக்கிறீர்கள்! அவரிடம் இந்த ரெண்டரை ரூபாயைத்தான் கேட்பீர்களா?''

''ஆமாம்!''

''வேறு ஒன்றும் உங்களுக்குக் கேட்க வேண்டாமா?... வேறு எதையும் கேட்கத் தோன்றவேயில்லையா?'' என்று தன்னை ஒருமுறை பார்த்துக் கொண்டவளின் குரலில் இலேசாகச் சோகம் இழைந்தோடியது.

படுக்கையில் சாய்ந்தபடி அவளை உற்றுப் பார்த்துக் கொண்டு ''எனக்குத் தோன்றவில்லை. ஏனென்றால், எனக்குக் கேட்க வேண்டும் என்று தோன்றுவதைக் கேளாமலே அவர் கொடுத்து விடுவார். அவரும் பெரியவர். கேளாமல் கொடுத்து விடுவார். நானும் பெரிய ஹீரோ. கொடுக்காமலே எடுத்துக் கொண்டு விடுவேன்'' என்று புன்னகை செய்தான் ரகு.

''நீங்கள் ரொம்பப் பொல்லாதவர். அன்று எழும்பூர் ஸ்டேஷனில் ஓர் அழகான பெண் கெஞ்சுகிறாள் என்பதற்காகக்கூட விட்டுக் கொடுக்காமல் சண்டை போட்டபோதே என் அனுமதி யில்லாமலே என் இதயத்தை எடுத்துக்கொண்டு விட்டீர்கள்!'' என்றபடி அவன் தலைக் கட்டைச் சரிசெய்தாள் அவள்.

## மற்றுமொரு மந்திராலயம்!



ஆந்திர தேசத்து மந்திராலயத்தில் ஜீவசமாதியாகக் குடிகொண்டுள்ள ஸ்ரீ ராகவேந்திர சுவாமிகளின் மகிமையையும், அற்புத சக்தியையும் அறியாதார் இல்லை. அந்த வரப்பிரசாத மகாபுருஷரின் திருவருட் துணை கொண்டு சென்னை வடபழனியை அடுத்த சாலிக்கிராமம் எனும் இடத்தில் ஸ்ரீ ராகவேந்திர சுவாமிகளுக்கு ஒரு பிருந்தாவனம் அமைப்பதற்கு ஆஸ்திக அன்பர்கள் முயற்சி எடுத்துள்ளனர். மந்திராலய க்ஷேத்திரத்திலிருந்து புனித மண்ணைக் கொண்டுவந்து சென்னையில் இந்தப் பிருந்தாவனம் அமைக்கப்பட இருக்கிறது. மந்திராலயத்து மண் விளைவிக்கும் மகிமையை இங்கும் அனுபவிக்க முடியும் என நம்பலாம். மக்களின் பலவித இன்னல்களுக்கு ஆறுதலாக இருக்கக்கூடிய இந்தப் பிருந்தாவனம் விரைவில் உருவாவதற்கு அன்பர்கள் அடியிற் காணும் முகவரிக்குப் பொருள் அனுப்பக் கோருகிறோம்: ஸ்ரீ ராகவேந்திர சுவாமி பிருந்தாவனத் திருப்பணிக் கமிட்டி, 5, சத்தியமூர்த்தி தெரு, தேவராஜ நகர் காலனி, சாலிக்கிராமம், சென்னை - 26.

# சொத்து வைத்திருப்போர்களே ! வரி கொடுப்போர்களே !

## எந்த ஒரு 'பேனமி' சொத்தின், அல்லது ஒப்புக்காக வேறு ஒருவர் பெயரிலுள்ள சொத்தின் உண்மையான, அல்லது பயனை அனுபவிக்கும் உரிமையுள்ள சொந்தக்காரரா நீங்கள்?

அவ்விதம் இருந்தால், அத்தகைய சொத்தின் விஷயத்தில் உங்களுக்கு இருக்கும் **பேனமி** பாத்தியதையை மறைக்காமல் தயவு செய்து பின்வரும் வகையில் **தெரிவித்து விடுங்கள் :**

அ) உங்களுடைய வருமானக் கணக்கை (ரிடர்ன்ஸ்) கொடுக்கும்போது 'பேனமி' சொத்து மூலமான **வருமானத்தையும் தெரிவித்துவிடுங்கள் :**

அல்லது

ஆ) உங்களுடைய சொத்து விவர அறிக்கையில் அதன் **மதிப்பை அறிவித்துவிடுங்கள்.**

அல்லது

இ) 1962-ம் வருடத்திய வருமான வரி **விதிகளின் 122-வது விதிப்படி** நிர்ணயிக்கப்பட்டுள்ள ஃபாரம் 53-ல் 'பேனமி' விவ-ரங்களை **அறிக்கையாகத்** தயாரித்து **தெரிவித்து விடுங்கள்.**

**இந்த விவரங்களைத் தெரிவிப்பது உங்களுக்கு நன்மையே பயக்கும்.** ஏனெனில், உங்களுடைய 'பேனமி' உடைமை விவரங்களைத் **தெரிவிக்காவிடில்**

1) அந்த உடைமைகள் விஷயத்தில் உங்களுடைய உரிமையை நிலை-நாட்ட நீங்கள் கோர்ட்டில் **வழக்குத் தொடர முடி-யாது.** அதனால் உங்களுடைய உடைமையை இழக்கும் அபாயத்-திற்கு நீங்கள் உள்ளாகக்கூடும்.

2) **தவறான, பொய்யான** அல்லது **தவறும் பொய்-யுமான** வருமான வரிக் கணக்கை கொடுத்ததற்காக உங்கள் மீது **வழக்கு தொடரும் நிலையை** நீங்கள் **ஏற்-படுத்திக் கொள்கிறீர்கள்.**

மேலும் தகவல் அறிய தயவு செய்து மதிப்பீடு செய்யும் உங்களுடைய வருமான வரி அதிகாரியுடனோ, வருமான வரி இலாகாவின் பொதுஜனத் தொடர்பு அதிகாரியுடனோ தொடர்பு கொள்ளுங்கள்.

வெளியிட்டது :

**டைரக்டரேட் ஆஃப் இன்ஸ்பெக்ஷன்**
(ஆய்வு, புள்ளி விவர, வெளியீட்டுப் பிரிவு)
மயூர் பவன், கன்னாட் சர்க்கஸ், புது தில்லி

davp 73/155

# வட்ட மேஜை

காஞ்சி ஸ்ரீ ஆச்சார்யாள் அவர்கள், இளைஞர்கள் வரதட்சிணை வாங்காமல் ஏழைப் பெண்களை மணம் புரிந்து கொள்ள முன் வர வேண்டும் என்று திருவாய் மலர்ந்தருளி னார்கள். உண்மையில் வரதட்சிணை வாங்குதல் நம் சமுதாயத்தில் பரவியுள்ள ஒரு கிராத கொடுமையே ஆகும். இக்கொடுமையை ஒழித்தாலல்லாது ஏழைகளுக்குப் புனர் வாழ்வு கிடைக்காது என்பதும், வரதட்சிணை யினால் சமூகம் ஒருபோதும் முன்னேறாது என்ப தும் நல்ல மனமுள்ள அனைவரும் ஒப்புக் கொள்ள வேண்டிய உண்மைகள். பூஜ்யஸ்ரீ ராஜாஜி அவர்களும் இதே கருத்தை வலி யுறுத்தி வந்தார் என்பதும் வெள்ளிடை மலை. எனவே ஸ்ரீ ஆசாரியாள் திருவுளப்படி அவர்களது ஆசியுடன் இதற்கான முயற்சி களில் ஈடுபட ஒரு சில இளைஞர்களாகிய நாங்கள் முடிவெடுத்திருக்கிறோம். மனித சமுதாய நலனில் நாட்டம் கொண்டுள்ள இளைய தலைமுறையினர் இப்புனிதப் பணியில் பங்கு கொண்டு எங்களுடன் சேர்ந்து ஒத்துழைக்க வேண்டுகிறோம். இக்காரியத்தை இனிதே நிறைவேற்ற விழைபவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட முகவரி மூலம் எங்களுடன் தொடர்பு கொள்ள வேண்டு கிறோம்.

'சமூகநல' இளைஞர் மன்றம்,
5-6-20, குழந்தை
இல்லம், வத்தலகுண்டு
10-7-73

கே. கணேசன்
கே. பாலசுப்பிரமணியன்
எஸ். லக்ஷ்மிநரசிம்மன்

***

கடந்த 20—5—73 அன்று கும்பகோணம் அரசினர் மருத்துவ மனையில் நான்கு விரல் களை இழந்த நோயாளியை ஒருவர் கண்ட தாகவும், அவருக்குக் கட்டுக் கட்டும் கம்ப வுண்டர் கட்டுக் கட்ட மறுத்ததாகவும், நோயாளியிடம் ஐந்து ரூபாய் கொடுத்தால் தான் கட்டுக் கட்டுவதாகக் கூறியதாகவும் புகார் செய்து, 1—7—73 கல்கியின் வட்ட மேஜைப் பகுதியில் எழுதியுள்ளதைக் கண்டு அதிர்ச்சி யடைந்தோம். இதுபோன்ற சம் பவம் ஏதும் எங்கள் மருத்துவ மனையில் நடைபெறவில்லை.

எங்கள் மருத்துவ மனை ஊழியர்கள் ஆயிர மாயிரம் நோயாளிகளுக்குத் தினமும் நல்ல முறையில் பணியாற்றி வருகிறார்கள்.

கும்பகோணம்,
2—7—73

ஆர். மரிய ஆசை
செயலாளர், செவிலிய
உதவியாளர்கள் சங்கம்,
அரசு மருத்துவமனை

***

கல்கி 8—7—73 இதழில் 'வைட்ஸி எனப் படும் ஒரு வகை உறக்கம் தூக்க வியாதியைத் தோற்றுவிக்கும் வைரஸ் கிருமி பரவுகிறது' என்றுள்ளது. இந்த வியாதியைத் தோற்று விப்பது வைரஸ் என்பது தவறு. ட்ரிபன ஸோமா காம்பியென்ஸி (Trypanasoma Gambiense) என்னும் ஒட்டுண்ணி (Parasite)யினால் இந்நோய் பரவுகிறது. இந்த ஒட்டுண்ணி, பிராணி இனத்தைச் சேர்ந்தது. வைரஸ் என்பது உயிருள்ள பொருளேயன்றிப் பிரா ணியா, தாவரமா என்று பகுத்தறிய முடி யாத ஒன்று. அதை புரோட்டீன் மூலக்கூறு (Protein Molecule) என்றும் சொல்வதுண்டு. ஓர் அங்குலத்தில் எழுபதினாயிரத்தில் ஒரு பாகம் முதல் மூப்பது லட்சத்தில் ஒரு பாகம் வரை விட்டம் உடையது. மிகச் சிறிய பாக்டீரியாவைவிட மிக மிகச் சிறியது. ஜலதோஷம், பெரியம்மை, இளம்பிள்ளை வாதம், மணல்வாரி அம்மை இவை வைர ஸினால் உண்டாகும் நோய்கள்.

தங்கவரம்
10—7—73

ப. சான்தான் குட்டிப் பிள்ளை




லண்டன் கோர்ட்டில் ஒரு விவாகரத்து வழக்கு நடந்து கொண்டிருந்தது. என்ன சமாதானம் செய்தும் இருதரத் தாரும் இனி சேர்ந்து வாழ முடியாது என்ற நிலை. அவர் களுக்குச் சொந்தமானவற்றை யெல்லாம் சரி பாதியாகப் பிரித்துக்கொள்வது என்று திட்டம் வகுக்கப்பட்டது. ஆனால் அவர்களுக்கு இருந்தது மூன்று குழந்தைகள். எப்படிப் பிரிப்பது? ஆக இருவரும் ஒரு முடிவுக்கு வந்தார்கள், தாற் காலிகமாகச் சேர்ந்து இருந்து இன்னொரு குழந்தையைப் பெற்றுக்கொண்ட பிறகு விவாகரத்து செய்யத் திட்டமிட்டு வெளியேறினர். நான்காவது குழந்தை பிறக்கும் வரையில் அவர்கள் அன்போடு வாழத் தீர்மானித்தார்கள். ஆனால் அவர்களுக்கும் பல ஆண்டுகளுக்குக் குழந்தையே பிறக்காமல் போயிற்று. இதற்கிடையில் அன்போடு சேர்ந்து வாழ்வதே பழகிவிட்டது அவர்களுக்கு. விவாகரத்துக்கு அவசியம் இல்லாமலே போய்விட்டது!

தகவல்: சாமா

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031
Managing Editor: T. Sadasivam

# குறிப்பிட்ட 'சில' நாட்களில் நீங்கள் தனிமையில் சோர்வுடன் இருக்கையில் சொல்ல முடியாத வலியினால் அவதிப்படுகிறீர்களா?

நீங்களோ ஒரு பெண்மணி, 'சில' நாட்களில் 'ஏன் பெண்ணாகப் பிறந்தோம்' என்ற எண்ணம் ஏற்படலாம். காரணம். வலியும் அசௌகரியமும் உங்களை சோர்வடையச் செய்வதால் அயர்ச்சி ஏற்படுகிறது.

கவலை வேண்டாம்.

ஒரே ஒரு ஸாரிடான் சில நிமிடங்களில் நிவாரணமளிக்கிறது. ஸாரிடான் விசேட ஃபார்முலாவின்படி தயாரிக்கப் பட்டதாகும். அது இதமளித்து உங்களை சுறுசுறுப்புடனும் உற்சாகத்துடனும் இருக்கவைக்கிறது.

ஸாரிடான் சாப்பிடுங்கள். ஒன்றே ஒன்று போதும். உங்கள் மனம் எதிலும் லயிக்கத் தொடங்கிவிடும்.

**ஸாரிடான்**

ட்ரேட்மார்க் 'ரோஷ்'

தரமான ஒரு
ரோஷ் தயாரிப்பு



REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon
இலங்கையில் விலை 45 சதம் (தபால் செலவு தனி)